Regd. No. M. 4392

ரயிலிலிருந்து சாமான்களை எடுத்து வரவோ வெளியூர்களுக்கு சாமான்களை அனுப்பவோ நீங்கள் சிரமப்பட வேண்டாம். விவரங்களுக்கு எழுதுங்கள்




மதராஸ் & தென் மராட்டா ரயில்வேக்கு லோகல் டெலிவரி கண்ட்ராக்டர்கள்

202-3, மவுண்டு ரோடு (போன் :-8536) மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.




சூதக கோளாறுகளை நிவர்த்தித்து
ஆரோக்கியத்தை அளிக்கவல்லது

# லோத்ரா

கர்ப்பாசய ரோக நிவாரணி

எல்லா மருந்து
ஷாப்புகளிலும் கிடைக்கும்

K.L.E-

தயாரிப்பவர்கள் :

**கேஸரி குடீரம் லிமிடெட்.,**
மதராஸ்.

தமிழ்நாடு ஏஜெண்டுகள் :

**ஸீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்,**
மேல கோபுர வீதி :: மதுரை.




# இந்தியன் பாங்க்
லிமிடெட்.

தலைமை ஆபீஸ் :
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு :: மதராஸ்.

லோகல் ஆபீஸ்கள் :
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி,
மயிலாப்பூர், தியாகராய நகர்,
புரசவாக்கம், மவுண்ட் ரோடு.

தென்னிந்தியாவில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிரான்சுகளும் சப் ஆபீஸ்களுமுள்ளன.

அதிகாரம் பெற்ற மூலதனம்
ரூ. 1,00,00,000
வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 60,00,000
செலுத்தப்பட்ட மூலதனம்
(31-12-43வரை) ரூ. 28,90,385
ரிஸர்வ் நிதி ... ரூ. 30,50,000
டெபாஸிட்கள் ... ரூ. 8,13,62,549

N. கோபால அய்யர், செக்ரடரி.



# கன்னிகாதானம்

★

மதராஸ் திருவாளர் A. முருகேச முதலியார் அவர்கள் குமாரத்தி திருநிறைச்செல்வி ராஜலக்ஷ்மி அம்மாளுக்கும் ஆற்காடு தோப்புகானா மண்டி வே. முனுசாமி முதலியார் அவர்கள் பௌத்திரனும் V. M. ரத்தின முதலியார் அவர்கள் ஜேஷ்ட குமாரன் திருநிறைச்செல்வன் R. தாமோதர முதலியாருக்கும் ஆற்காடு தோப்புகானாவில் 4-6-44ல் விமரிசையாக விவாகம் நடந்தேறியது.

# கல்கி



KALKI ஜூலை 2, 1944 4 அணா

# பல சரக்கு



பெயர் பெற்ற நூலாசிரியரான பெர்னாட்ஷாவின் மேதையைப் பார்த்து மனதைப் பறிகொடுத்த அழகிய சீமாட்டி ஒருத்தி அவருக்கு ஒரு கடிதம் எழுதினாள். அக் கடிதத்தில் அந்த அழகி, "நாம் இருவரும், கலியாணம் செய்து கொண்டால் என்னைப் போன்ற அழகும், தங்களைப் போன்ற அறிவு நுட்பமுள்ள குழந்தை நமக்குப் பிறக்கக் கூடுமல்லவா?" என்று கேட்டிருந்தாளாம். அதற்குப் பெர்னார்ட்ஷா எழுதிய பதில்:—

"அம்மா! நீர் சொல்லுவது ஒரு வகையில் சரிதான். ஆனால் அதற்கு மாறாக **என்னைப் போன்ற அழகும், நங்கையைப் போன்ற அறிவு முள்ள** குழந்தை பிறந்து விட்டால் என்ன செய்கிறது?"





தமிழ் வசன நடையைப் பற்றி டி. கே. சி. அவர்களின் அபிப்பிராயம் பிரசித்தமானது. அண்ணாமலை சர்வ கலாசாலை பாட புத்தகக் கமிட்டியில் அவர் ஒரு சமயம் அங்கத்தினராக இருந்தார்.

அப்பொழுது இண்டர்மீடியட் வகுப்புக்கு "இறையனார் அகப் பொருள் உரையில் எண்பது பக்கம் பாடமாக வைக்கலாம்" என்று மற்றக் கமிட்டி அங்கத்தினர்கள் ஆலோசனை சொன்னார்கள். "எண்பது பக்கம் என்னத்திற்கு? ஒரு பக்கமே போதும்!" என்று டி. கே. சி. கூறியதைக் கேட்டு அவர்கள் திகைத்தார்கள். இன்னும் அவர்களைத் தூக்கிவாரிப் போடும்படியாக டி. கே. சி. மேலும் சொன்னார்:—"**இந்த மாதிரி தமிழ் நடை எழுதக் கூடாது என்று காட்டுவதற்கு ஒரு பக்கம் போதாதா?**"



தேசிய கவி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாருக்குப் பதினொருவது ஆண்டிலேயே 'பாரதி' என்னும் பட்டம் கிடைத்து விட்டது. இவர் திருநெல்வேலி இந்து கலாசாலையில் படித்துக் கொண்டிருக்கையில், ஒரு வேடிக்கையான சம்பவம் நடந்தது.

இவரை அவமானப் படுத்துவதற்காக காந்திமதிநாதன் என்னும் ஒரு மாணவர், பலருக்கு எதிரில் 'பாரதி சின்னப் பயல்' என்னும் கடைசி அடியைக் கொடுத்து வெண்பா ஒன்று இயற்றச் சொன்னார். பாரதி சிறிதும் தயங்காமல் "காந்திமதி நாதனைப் பார்! அவன் சின்னப் பயல்" என்று பொருள்பட "........காந்திமதி நாதனைப் பாரதி (பார் + அதி) சின்னப் பயல்!" என்று ஒரு வெண்பாவை முடித்தார்.





பிரிட்டிஷ் சர்க்கார், தங்கள் சிப்பந்தி ஒருவருக்கு ஒரு அறிக்கை அனுப்பி யிருந்தார்கள். அந்தக் கவரில் 'மிகவும் ரகசியம்' என்று எழுதி யிருந்தது. சர்வ ஜாக்கிரதையாக அந்தக் கவரைப் பிரித்துப் பார்த்தால் அதனுள் ஒரு கவர் இருந்தது. அதன் மேலும் 'மிகவும் ரகசியம்' என்று எழுதி யிருந்தது.

மிகவும் கவனத்துடன் அந்தக் கவரையும் பிரித்துப் பார்த்தால் அதற்குள்ளும் ஒரு கவர் இருந்தது. அதன் மேலும் 'மிகவும் ரகசியம்' என்று எழுதியிருந்தது. அதைப் பிரித்துப் பார்த்தால் அதில் என்ன எழுதியிருந்தது என்று நினைக்கிறீர்கள்? அதில் "மிகவும் ரகசியம் என்று குறிப்பிடப் பட்டிருந்த அறிக்கை நம்பர் 125456ஐ இனிமேல் ரகசியம் என்று கருதவேண்டிய அவசியமில்லை" என்று எழுதியிருந்தது!

பெரியவர் கதை—16

# வீரக் கொதிப்பு

**ஸ்ரீ சுத்தானந்த பாரதி**

கரிகால் வளவன் நாட்டைச் சீர்திருத்தினான். பகைவரும் பணியும்படி அன்பினால் ஒற்றுமை காட்டினான். கல்வி, கலை, தொழில், வாணிகம், எல்லாம் ஓங்கச் செய்தான். பிறகு வாளை எடுத்தான்; வீரரைப் பயிற்றினான்; சதுரங்க சேனையும் சேர்த்தான். கப்பற் படையும் சேர்த்தான். வீரக் கொதிப்புடன் எங்கும் தமிழ்க்கொடியை நாட்டக் கிளம்பினான். ஒரு வாளை முறிக்க ஆயிரம் பகை வாட்கள் கிளம்பின. கோவில் வெண்ணியில் சேரனும் பாண்டியனும் எதிர்த்தனர். குறும்பரும் குறுநில மன்னரும், ஒளி நாகரும் பொதுவரும், இருங்கோ வேளிரும் தொடை தட்டி மீசை முறுக்கினர். எல்லாரையும் முதுகுக்கு மண் காட்டி எங்கும் புலிக் கொடியைப் பறக்க விட்டான் கரிகாலன். தென்னாடெல்லாம் சோழநாடாயிற்று. கப்பல்களை நடத்திக் கடற் போரில் இலங்கைக் கருவாகுவை வென்றான்.



"நட்ட நடுத் தெருவிலே இப்படி சண்டை போடுகிறேயே. பின்னே நமக்கு வீடு என்று ஒன்று எதற்காக வைத்திருக்கிறது?"

அதற்குள் வடநாட்டில் யாரோ தமிழரை ஒருவிதமாகப் பேசியதைக் கரிகாலன் காற்று வாக்கில் கேள்விப்பட்டான். வடக்கே படை நடத்தினான். வச்சிரம், மகதம், அவந்தி நாட்டு மன்னரைத் தமிழ்க் கொடிக்கு வணங்கச் செய்தான். வெற்றிக் கொடியை இமய மலைக்கே கொண்டு சென்றான். அதில் புலிக்கொடி வரைந்து வீர முழக்கத்துடன் திரும்பினான். அக்காலத் தமிழ் மன்னர் இமயம் வரையில் படை நடத்தி, அதன் பிடரில் தமது கொடியை நாட்டி, எழுதி வருவதை ஒரு வீரச் சிறப்பாகக் கொண்டனர். கரிகாலன், "இமயமலை குறுக்கிடாவிட்டால் இன்னும் வடக்கே சென்று மேரு மலையில் தமிழ்க் கொடி நாட்டுவேனே!" என்று வருந்தித் திரும்பினான். நெப்போலியன், ஸீஸர், சிக்கந்தர் முதலிய வீரர்கள் போரில் கொன்று குவித்த பிணத் தொகை பார்த்து மகிழ்ந்தனர். கரிகாலன் அந்தணர், பெண்டிர், ஆக்கள், பிணியாளர், சாதுக்கள், பொது ஜனங்கள்—இவர்களை முரசடித்து அப்புறம் போகச் சொல்லிவிட்டுப் பெரும்பாலும் எதிரியின் போர்ப் படைகளையே பொருதினான். அவருள்ளும் பலரைச் சிறைப் பிடித்துக்கொண்டு வந்தான். அவர்களுக்கெல்லாம் காவேரி அணை கட்டுவதில் சரியான வேலை கொடுத்தான்.

காவேரியைத் தென் கங்கையாக்கிச் சோழ நாட்டை நெற்களஞ்சியமாக்கியது கரிகாலனே. தான் வென்ற நாட்டிலெல்லாம் அவன் கல்வி, தொழில் வாணிகங்களை வளர்த்தான். ஆங்காங்குள்ள புலவர்களைக் கொண்டு தமிழ்க் கல்வி பரப்பினான்.

எவரும் வாசலில் கட்டிய ஆராய்ச்சி மணியடித்தால் அரசன் ஓடிவந்து குறை கேட்டு முறை செய்தான். அவனே காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறந்த துறைமுகமாக்கிக் கப்பல் வாணிபத்தால் தமிழ் நாடு செல்வங் கொழிக்கச் செய்தான். அவனைப் பாடாத புலவரில்லை. பட்டினப் பாலை, பொருநராற்றுப் படை இரண்டும் அவனைப் புகழும். திருமாவளவன் வாழ்க!

**சீருடனே போராடி வென்றுலகை யாளுகின்ற**
**பேருடனே நாட்டைப் பிரிக்காமல்—சீருடனே**
**அன்பும் வளமும் அறிவும் உண்மையும்**
**இன்பமும் ஈவான் இறை.**

# இங்கே உளுந்து கிடைக்கும்










# அடே துரோகி!

சுந்தரம்

★

வெளியே போய் விட்டு அப்போதுதான் வீட்டிற்குள் நுழைந்தேன். என் தகப்பனார் உள்ளே தன் அறையில் இருந்து கொண்டு யாரையோ திட்டிக்கொண்டிருப்பதை அவரது கடுமையான குரலினின்றும் அறிந்து கொண்டேன். யாரைத் திட்டுகிறார் என்பதை அறியக் கதவு மறைவில் நின்றுகொண்டு உற்றுக் கேட்க ஆரம்பித்தேன்.

"ராமு! நீ எனக்குப் பிள்ளையா? இல்லவே இல்லை! நீ எனக்குத் துரோகிதான். அடே, பாவி! உன்னைச் சிறு வயது முதல் சீரும் சிறப்புமாக வளர்த்ததற்கா என்னை அடிக்கடி துன்பப்படுத்திக் கொண்டு வருகிறாய்? இது நியாயமா? ஏ! பாவி! நீ இருந்தாலும் ஒன்றுதான். அல்லது இறந்தாலும் ஒன்றுதான். உன்னால் எனக்குத் துன்பத்தைத் தவிர வேறு நன்மை ஒன்றும் கிடையாதா? என் பெட்டியிலிருக்கும் பணத்தையெல்லாம் நான் அறியாமல் கள்ளச் சாவியின் மூலம் எடுத்துச் சென்று அதைக் குடிப்பதிலும் சூதாட்டத்திலும் செலவழிக்கிறாயே! பெற்ற தாய் என்று கூட எண்ணாமல் அவள் கழுத்துச் சங்கிலியைப் பலவந்தமாகப் பிடுங்கிச் சென்றாயே! அடே, மானங்கெட்டவனே!..." என்று அடுக்கிக்கொண்டே போனார்.

ஒரு பாவமு மறியாத என்னை ஏன் இப்படித் திட்டுகிறார் என்றெண்ணித் திகைத்து உள்ளே சென்றேன். சமையல் அறையில் இருந்த என் தாயாரைப் பார்த்து, "அம்மா! அப்பாவுக்கு ஏதாவது உடம்பு சௌகரியமில்லையா? ஒன்று மறியாத என்னை ஏன் திட்டிக்கொண்டிருக்கிறார்? கருப்பஞ் செட்டியிடம் அப்பா கடன் வாங்கியிருந்தாராம். கடன் வாங்கி வெகு நாட்கள் ஆகிவிட்டன என்றும் அதைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்றும் அவன் கத்தவே, நான் அப்பா பெட்டியைத் திறந்து பணத்தை எடுத்துக் கொடுத்து அவனை அனுப்பினேன். அதைத் தவிர, பெட்டியிலிருந்து நான் திருடவில்லையே! நீதானே அம்மா உன்னுடைய சங்கிலியை என்னிடம் கொடுத்து அதைத் தட்டானிடம் கொடுத்து புது பாஷன் சங்கிலியாகச் செய்து தரும்படிச் சொன்னாய்? நான் அதை உன்னிடமிருந்து பலவந்தமாகப் பிடுங்கிச் சென்று கெட்ட வழிகளில் செலவழித்து விட்டேன் என்று கத்துகிறாரே? இதெல்லாம் உனக்குத் தெரியாதா? நீயாவது அவரிடம் இதை யெல்லாம் சொல்லக் கூடாதா?" என்று கேட்டேன்.

உடனே என் தாயார் 'இடி இடி' யென்று சிரிக்க ஆரம்பித்தாள்.

"ராமு! உன் தகப்பனார் ஆபீஸில் ஒரு நாடகம் நடத்தப் போகிறார்களாம். அதில் அவருக்கு ராமு என்னும் பையனுடைய தகப்பனாராக நடிக்க வேண்டிய பாகம் கொடுக்கப்பட்டிருக்கிறதாம். அவர் தான் நடிக்க வேண்டிய பாகத்தைத்தான் இப்பொழுது ஒத்திகை நடத்திக் கொண்டிருக்கிறாரே தவிர, உன்னைத் திட்டவில்லை. நானும் முதலில் உன்னைத்தான் திட்டுகிறார் என்றெண்ணினேன். பிறகுதான் அவர் சொன்னார்" என்று கூறிச் சிரித்தாள்.

# ஏகோபத்தியமாக

## அங்கீகரிக்கப்பட்டது

# ஸ்வஸ்திக் பரிமள காஸ்டராயில்




ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய், 15

451 NAS

சேல்ஸ் டிப்போ: 158-B, பிராட்வே, ஜி. டி., மதராஸ்



கடையாக, எல்லாப் பொருள்களையும் ஆராய்ந்து முடிவு கட்டப் பார்ப்போமானால் எத்தனையோ பொருள்கள் எவ்வளவாகவோ விரிந்து கிடக்கின்றன. பூமியைப் பார்ப்போம்; நிலையாய் நிற்கிற பொருள்கள் எத்தனையோ. மலைகள், மரங்கள், கடல் இவைகள் நிற்பன. யானை, ஆறு, நீர் கொண்டு வரும் மேகங்கள் இவைகள் இயங்குவன. இதைப்போல வானத்தைப் பார்த்தாலும் சூரியன் சந்திரன் கிரகங்கள் இவை இடம் மாறிப் பெயர்கின்றன. நக்ஷத்திரங்கள் இடம் மாறிப் பெயர்வதில்லை. இவைகள் எல்லாம் ஒரு ஒழுங்கில் நிற்கின்றன அல்லது இயங்குகின்றன. ஒரு அரச தத்துவக் தானே அவைகளைப் பாதுகாக்கிறது. அந்தத் தத்துவம் இல்லாத வர்க்கம் கிடையாதப்பா!

'முறைதெரிந்(து) ஒருவகை
முடிய நோக்குறின்,
மறையவன் வகுத்தன
மண்ணில் வானிடை,
நிறைபெறும் தன்மையின்
நிற்ப செல்வன, —
இறைகளை இல்லன
யாவை? காண்கிலம்!'

[மறையவன் வகுத்த: பரமன் அமைத்துள்ள; நிறைபெறும் தன்மையின் நிற்ப செல்வன: ஒழுங்கு என்கிற ஒரு அற்புதமான நெறியில் நிற்பனவும் இயங்குவனவும்; இறைகளை இல்லன யாவை: அரசியல் தத்துவம் ஒன்று இல்லாத வஸ்துக்கள் ஏதேனும் உண்டா? காண்கிலம்: நாம் பார்த்ததில்லை.]

கம்பர் வசிஷ்டரை எப்படிப் பேச வைக்கிறார் பாருங்கள்! அரசியல் விஷயத்தை எடுத்துப் பேசும்போது, இன்றைய அரசியல் உலகம், பலவேறுபட்ட உலகம், எப்படி அமைந்திருக்கிறது, ஆளப்படுகிறது, ஆட்டப்படுகிறது என்பதை யெல்லாம் நேரில் பார்த்துச் சொன்னது மாதிரியிருக்கிறது. அதோடு நிற்கவில்லை; தற்காலத்து பூகோளக் கலை, உயிரியல் கலை, வான இயல் கலை, எல்லாவற்றையும் ஊடுருவிப் பார்த்து அங்கங்கே அரசியலே நின்று ஆளுகிறது என்பதையும் தற்காலத்தவர் போலவே பேசுகிறார் வசிஷ்டர். பாதனிடம் சொல்லவேண்டிய விஷயத்துக்கு வேகம் எப்படி உண்டாய் விடுகிறது!

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 68. யாவை இறைகளை இல்லன?

தமையன் ராமன் அரசனாக இருந்து ஆளவேண்டியிருக்க, காட்டுக்கு அனுப்பி விட்டார்களே அவனை. இந்த விஷயம் பரதனை என்ன பாடு எல்லாமோ படுத்தி விட்டது. ஆற்ற முடியாத துன்பத்துக்கு உள்ளாகி யிருக்கிறான். வசிஷ்டர் சுமந்திரன் மற்றும் தலைவர்கள் எல்லாருக்கும் பரதனது நிலை நன்றாகத் தெரிகிறது.

ஆனாலும் நாடு அரசனில்லாத நிலையில் அல்லவா இருக்கிறது? அதைவிட ஆபத்தான காரியம் ஒரு நாட்டுக்கு உண்டா? வாயினால் சொல்லுவதற்குக் கஷ்டமான விஷயத்தைச் சொல்லித் தீர வேண்டும். வசிஷ்டர் பேச ஆரம்பிக்கிறார் :

பரதனே! உன்னுடைய பரிசுத்தமான குணத்தை என்ன என்று சொல்லுவேன்! பலர் வந்திருக்கிறார்கள். வேதியர்கள், முனிவர்கள், அனுபவமுள்ள பெரியார்கள், அரசர்கள் எல்லாரும் வந்திருக்கிறார்கள். வந்தவர்களும் நாட்டில் நீதியும் ஒழுங்கும் எப்பொழுதும் போல் அமைந்திருக்க வேண்டும் என்பதைத் தெரிவிப்பதற்காகத்தான்.

'வேதியர், அருந்தவர்,
விருந்தர், வேந்தர்கள்
ஆதியர் நின்வயின்
அடைந்த காரியம்
நீதியும் தருமமும்
நிறுவல் : நீயிது
கோதறு குணத்தினால்
மனத்துன்க் கோடியால்.'

[ஆதியர் : முதலானவர்கள் ; நிறுவல் : நிலைபெறச் செய்தலே ; மனத்துன்க் கோடியால் : தயவு செய்து அங்கீகரிக்க வேண்டும் ; கோடி : கொள்ளுவாயாக.]

அரசன் என்பவன் ஒருவன் இருந்து சைன்ய பலங்களோடு ஒரு நாட்டைப் பாதுகாக்க வில்லை என்று வைத்துக் கொள்ளுவோம் ; அதன் நிலைமை எப்படி யிருக்கும்?

'வன்னுறு வயிரவாள்
அர(சு)இல் வையகம்,
நன்னுறு கதிரிலாப்
பகலும், நாளொடும்
தென்னுறு மதியிலா
இரவும், தேர்வரும்
உன்னுறை உயிர் இலா
உடலும் ஒக்குமே!'

[வன்னுறு வயிரவாள் அரசில் வையகம் : கூர்மையான வாட் படையோடு கூடிய அரசனில்லாத நாடு : நன்னுறு கதிரிலாப் பகலும் : நெருங்கிய கிரணங்கொண்ட சூரியனில்லாத பகலையும் — அதாவது பூரண கிரகணத்தின் போது இருட்டிவிடுவது போல : தென்னுறு மதியிலா இரவும் : கிரகங்களோடு தெளிந்த சந்திரனில்லாத இரவையும் ; தேர்வரும் உன்னுறை உயிரிலா உடலும் ஒக்குமே : எவ்வளவு ஆராய்ந்த போதிலும் இன்னதென்று தெரிய முடியாதபடி மறைந்து தங்கும் உயிர்த் தத்துவம் இல்லாத உடலையும் ஒக்குமே — அரசில் வையகம்.]

ஏதோ எல்லாம் நீதி முறைப்படி நடக்கிற தேசமானாலும் சரி, அக்கிரமமே தாண்டவமாடுகிற தேசமானாலும் சரி, இவைகள் போக எத்திசையிலுள்ள — வானமோ பாதாளமோ — வேறு எங்கேயுள்ள உலகமானாலும் சரி, அவைகளைப் பற்றிக் கொஞ்சம் யோசித்துப் பார்ப்போம்.

'தேவர்தம் உலகினும்,
தீமை செய்துழல்
மாவலி அவுணர்கள்
வைகும் நாட்டினும்,
ஏவெவை உலகம்என்(று)
இசைக்கும் அன்னவை,—
காவல்செய் தலைவரை
இன்மை கண்டிலம்.'

[மாவலி அவுணர்கள் : அபார சக்தி வாய்ந்த அரக்கர்கள் என்று சொல்லும்படியான — அசுரர்கள்.]

இன்னொரு விஷயம் கேட்க வேண்டும் என்று சொல்லுகிறார் வசிஷ்டர்.

# பழனி கிருஷ்ண அய்யர்

ஆலமங்கலம் வைத்தியநாத பாகவதர்

நம் தேசத்தில் கடத்தை வாத்தியமாக உபயோகப் படுத்திச் சங்கீதக் கச்சேரிகளுக்கு லாயக்குள்ளதாகச் செய்து ஜனங்களை ரஞ்ஜிக்கப்படுத்திப் பிரக்யாதி பெற்றவர்களில் இவரை முதன்மையாகச் சொல்ல வேண்டும். இவருடைய வாத்தியத்தை நான் அடிக்கடி கேட்டிருக்கிறேன். இசை, தாளம் இந்த இரண்டு மார்க்கத்திலும் நைபுண்யம் பெற்றவர். இருந்தாலும், தாளப்ரஸ்தாரத்தில் இவர் பெற்றிருந்த ஞானத்திற்குச் சமமான ஞானம் உள்ளவர்கள் மிகச் சிலரே.

புதுக்கோட்டை சமஸ்தானம் கோளுபட்டு என்றஊரில் சரப சாஸ்திரிகள் அவர்கள் கடம் கிருஷ்ணய்யரவர்களுடன் ஒரு கச்சேரி செய்யும்படி நேரிட்டது. அன்று மிருதங்க வாத்தியமில்லாமல் இவருடைய கடத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு சாஸ்திரிகள் செய்த கச்சேரியானது இன்னும் என் செவியை விட்டு அகலவில்லை.



டாக்டர் :—நான் கொடுத்திருந்த மருந்தைச் சாப்பிட்டிருந்தால் ராமு நிச்சயமாய்ப் பிழைத்திருப்பான்.

நண்பர் :—ராமு தெருவில் போகும்போது ராணுவ லாரியில் அடிபட்டல்லவோ இறந்தான்?

டாக்டர் :—சரிதானய்யா, என் மருந்தைச் சாப்பிட்டிருந்தால் அவனால் நடந்து வெளியே போக முடிந்திருக்குமா?

அசகாய சூரர் என்ற பதம் இந்தப் பழனி கிருஷ்ணய்யருக்கே உரித்தானது. வேறு ஒருவருடைய ஒத்தாசையுமின்றி ஏகாங்கியாய்த் தமிழ்ப் பதங்களைப் பாடிக்கொண்டு மூன்று அல்லது நான்கு மணி நேரத்திற்குக் குறையாமல் கட வாத்தியத்துடன் கச்சேரி செய்து ஜனங்களை ஆனந்திக்கச் செய்வார். இவர் வாத்தியத்திலிருந்து உண்டாகிற நாதமானது மிருதங்கத்தினுடைய நாதம் மாதிரி அனுஸ்யூதமான நாதத்துடன் விளங்கி, அதிகம்பீரமாகச் சுமார் பதினாயிரம் ஜனங்களுக்குக் கேட்கும்படியாயிருக்கும்.

ஒரு சமயம், புதுக்கோட்டையில் வடக்கு வீதி கிருஷ்ணய்யர் மடத்தில் தாளத்தில் கியாதி பெற்ற கஞ்சிரா மான்பூண்டியாப் பிள்ளை, மிருதங்கம் தக்ஷிணாமூர்த்திப் பிள்ளை, இலுப்பூர் பொன்னுசாமிப் பிள்ளை — மற்றும் அநேக பெரிய வித்வான்கள் கூடி இவருடைய தாளக்ஞானத்தைச் சோதனை செய்ய எண்ணினார்கள். பொன்னுச்சாமிப்பிள்ளை அவர்கள் பிக்கட்டான தாளத்தில், விஷமமான இடத்தில் ஒரு பல்லவி அமைத்துக்கொண்டு பல்லவி பாடி அதற்கு இவரை வாசிக்கும்படி கேட்டுக்கொள்ள, இவர் சர்வ சாதாரணமாய் அப் பல்லவிக்குக் கொஞ்சமும் லட்சியம் செய்யாமல் வாசித்து ஜனங்களை ரஞ்ஜிக்கச் செய்ததைப் பார்த்து எல்லா வித்வான்களும் மிக்க பிரமிப்பை அடைந்தார்கள்.

அதில் முக்கியமாக, அப்பொழுது கட வாத்தியம் வாசித்துத் தொழில் செய்து வந்த ஸ்ரீமான் தக்ஷிணாமூர்த்திப் பிள்ளை அவர்கள் இனி இந்தக் கட வாத்தியத்தைத் தம் ஜன்மாவுக்குத் தொடுகிற இல்லை என்று பிரதிக்ஞை செய்து, பிறகு மிருதங்கத்தைச் சாதகம் செய்து உயர்ந்த கியாதியை அடைந்தார்.

ஆயுர்பாவக் குறைவினால் இவருடைய வாத்தியத்தை ஜனங்கள் வெகு நாட்கள் கேட்டு அனுபவிக்கும்படியான பாக்கியத்தைப் பெற முடியவில்லை.

ராஜ்ய பதவி யோசனையை விட்டு விட்டு இருப்பதை வைத்துக் கொண்டு திருப்தியாக இருப்பதே நலம். பீமன் முதலானோர் இந்தப் பதவிக்கு ஆசைப்படுகிறார்கள். ஜராசந்தனைக் கண்டு நீரே பயந்திருக்க, நாங்கள் எம் மட்டும்?"

தருமபுத்திரனுடைய அடக்கம் பீமனுக்குப் பிடிக்கவில்லை.

"திருப்தியடைந்து சும்மா இருப்பது எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. முயற்சியே அரசர்களுக்கு விதிக்கப்பட்ட சிறப்பான குணம். தம் பலத்தைத் தாம் அறியாதவர்கள் புருஷ ஜன்மம் எடுத்துப் பயனில்லை. சோம்பலை நீக்கி ராஜநீதி உபாயங்களைத் திருத்தமாக உபயோகப் படுத்துகிறவன் தன்னைவிட பலவானான அரசனையும் வென்று விடலாம். முயற்சியும் உபாயமும் பயன் தரும். நான் பெற்றிருக்கும் தேக பலமும் கண்ணனுடைய சாதுரியமும் தனஞ்சயனிடத்திலுள்ள சாமர்த்தியமும் ஒன்று சேர்ந்தால் எதுதான் செய்ய முடியாது? நாம் மூவரும் ஒன்று சேர்ந்து புறப்பட்டால் ஜராசந்தனுடைய பலத்தை அடக்கி விடலாம். நீர் சந்தேகப்பட வேண்டாம்" என்று பீமசேனன் சொன்னான்.

"ஜராசந்தன் வதத்துக்குத் தகுந்தவன் என்பதில் ஐயமில்லை. எண்பத்தாறு அரசர்களை அநியாயமாகச் சிறையில் வைத்திருக்கிறான். இன்னும் பதினான்கு அரசர்களைப் பிடித்த பின், நூறு ராஜாக்களையும் ஒரே சமயத்தில் யாகப் பசுக்களாகக் கொன்று விழா நடத்த ஏற்பாடு செய்திருக்கிறான். பீமனும் அருச்சுனனும் ஒப்புக்கொண்டால் நானும் சேர்ந்து மூவருமாகப் போய் யுக்தியால் அந்தக் கொடியவனை வதம் செய்து சிறைப்பட்ட அரசர்களை விடுவிக்கலாம், இந்த யோசனை எனக்குச் சம்மதம்" என்றான் கண்ணன்.

யுதிஷ்டிரனுக்கு இந்த ஆலோசனை சரியாகத் தோன்றவில்லை. "சாம்ராஜ்ய பதவி மோகத்தினால் ஏமாந்து போய் என் இரண்டு கண்களைப் போலுள்ள பீமார்ச்சுனர்களை இழக்கும்படி நேரிடலாம். இந்த அபாயமான காரியத்திற்கு அவர்களை அனுப்ப எனக்குப் பிடிக்கவில்லை. இந்த யோசனையை விட்டு விடுவதே நலம்" என்றான்.

பிறகு தனஞ்சயன் பேசலானான்:

"பராக்கிரமத்திற்கு ஒப்பானது உலகத்தில் வேறொன்றுமில்லை. புகழ் பெற்ற குலத்தில் பிறந்த நாம் பராக்கிரமச் செயல்களைச் செய்யாமல்



பீமன்

வாழ்நாளை முடித்துவிட்டு உயிர் நீப்பதில் என்ன பயன்? வேறு எல்லா நற்குணங்களிருந்தும் காரியத்தில் பிரவேசிக்க மனமில்லாத பராக்கிரமமற்ற க்ஷத்திரியனுக்குப் புகழில்லை. வெற்றிக்குக் காரணம் உற்சாகம்தான். செய்ய வேண்டியதை ஊக்கத்துடன் செய்தால் பாக்கியம் அடையலாம். சாதன பலங்கள் இருந்தும் ஊக்கம் இல்லாமையினால் அந்தச் சாதனங்களை உபயோகியாமல் ஒருவன் தோல்வி அடையலாம். தன் பலத்தைத் தான் அறியாமலிருப்பதும் ஊக்கமில்லாமலிருப்பதுமே பெரும்பாலும் தோல்விகளுக்குக் காரணம். இந்தக் காரியத்துக்கு நாம் தகுதியுள்ளவர்கள். தகுதியில்லை என்று யுதிஷ்டிரர் ஏன் நினைக்கிறார்? விருத்தாப்பியம் அடைந்தபின் நாம் காஷாயம் தரித்து வனத்தில் விரதம் நடத்தலாம். இப்போது குல தருமத்திற்கு இயைந்த பராக்கிரமச் செயல்களில் ஈடுபடுவோம்" என்றான்.

இதைக் கேட்ட கண்ணன் மகிழ்ச்சி அடைந்தான். "பரத குலத்தில் குந்திக்கு மகனாகப் பிறந்த அருச்சுனன் வேறு என்ன யோசனை சொல்லுவான்? மரணம் அனைவருக்கும் நேர்ந்தே தீர வேண்டிய விஷயம். யுத்தம் செய்யாமலிருப்பதினால் யாரும் மரணத்திலிருந்து தப்பினது கிடையாது. நீதி சாஸ்திரங்களின்படி தகுந்த உபாயங்களைப் பிரயோகித்தும் பிறரை வசப்படுத்திக் கொண்டும் ஜயம் பெறுவதே க்ஷத்திரியனுக்கு உசிதமான கடமை" என்றான்.

முடிவில் ஜராசந்தனை வதம் செய்வதே கடமை என்று எல்லாரும் தீர்மானித்து யுதிஷ்டிரனும் ஒப்புக் கொண்டான்.

# வியாசர் விருந்து

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## ஜராசந்தன்

இந்திரப் பிரஸ்தத்தில் பாண்டவர்கள் மிகச் சிறப்பாக ராஜ்ய பரிபாலனம் செய்து வந்தார்கள். ராஜசூய யாகம் நடத்தி அரசர்க்கரசன் என்கிற பதவியை யுதிஷ்டிரன் பெற வேண்டுமென்று அவனைச் சூழ்ந்தவர்கள் ஆசைப்பட்டார்கள். அக்காலத்திலுமே சாம்ராஜ்ய மோகம் ரொம்ப இருந்ததாகக் காண்கிறது.

இந்த விஷயத்தைப் பற்றி யோசனை செய்வதற்காக யுதிஷ்டிரன் கிருஷ்ணனுக்குச் சொல்லியனுப்பினான். தரும புத்திரன் தன்னைப் பார்க்க விரும்புவதாகச் செய்தி வந்ததும் ஜனார்த்தனன் துவாரகையிலிருந்து வேகமான குதிரைகளைப் பூட்டிய வாகனம் ஏறிப் புறப்பட்டு இந்திரப் பிரஸ்தம் வந்து சேர்ந்தான்.

"ராஜசூய யாகம் செய்யச் சொல்லிச் சிநேகிதர்கள் சொல்லுகிறார்கள். எவன் எல்லா ராஜாக்களாலும் பூஜிக்கப்படுகிறானோ அவனே ராஜசூயம் செய்யத் தகுதியடைந்தவன். நீர்தான் இதைப்பற்றி எனக்குச் சரியான யோசனை சொல்லும் தன்மை வாய்ந்தவர். மற்றவர்களைப் போல் நீர் சிநேகத்தால் என்னிடமுள்ள குறைகளைப் பாராமல் பட்சபாதமாகப் பேசமாட்டீர். சொந்த லாபத்திற்கும் கேட்கிறவனுக்குப் பிரியமாக இருக்கும் என்கிற எண்ணங்கொண்டும் உண்மைக்கு மாறாக யோசனை சொல்லுவது மனிதர்களுடைய சுபாவம். நீர் அவ்வாறு செய்ய மாட்டீர்."

இவ்வாறு யுதிஷ்டிரன் கூற, கிருஷ்ணன் பதில் சொன்னான்:

"மகத நாட்டு ராஜாவான ஜராசந்தன் மற்ற அரசர்களையெல்லாம் ஜெயித்துத் தன் வசப்படுத்திக் கொண்டிருக்கிறான். அவனுடைய பராக்கிரமத்தினால் க்ஷத்திரியர்கள் எல்லாரும் அவனைக் கண்டு பயந்தும் பணிந்தும் நிற்கிறார்கள். பலசாலிகளான சிசுபாலன் முதலியவர்களும் அவனை ஆசிரயித்து வருகிறார்கள். ஜராசந்தன் இருக்கும் வரையில் வேறொருவன் எவ்வாறு ராஜாதிராஜப் பதவியை அடைய முடியும்? உக்கிரசேனன் மகனான மதிகெட்ட கம்சன் ஜராசந்தனுக்கு மருமகனும் துணையரசனுமான பின், நானும் என் குலத்தவரும் ஜராசந்தனை எதிர்த்தோம். மூன்று வருஷ காலம் ஓயாமல் அவனுடைய சேனைகளைத் தாக்கினோம். அவனை அடக்க முடியவில்லை. தோல்வியடைந்தோம். அவனுடைய பயத்தினால் நாங்கள் வடமதுரையை விட்டுவிட்டு மேற்கே துவாரகையில் கோட்டையும் நகரமும் புதிதாகக் கட்டிக்கொண்டு க்ஷேமமாக இருந்து வருகிறோம். நீர் ராஜாதி ராஜ பட்டம் பெறுவதை துரியோதனன், கர்ணன் முதலியோர் ஆட்சேபிக்காமலிருந்தாலும் ஜராசந்தன் யுத்தமின்றி ஒப்ப மாட்டான். எவராலும் தோல்வி என்பதை அறியாத ஜராசந்தன் இருக்கும் வரையில் நீர் ராஜசூயம் நடத்த இயலாது. அவனை எப்படியாவது வதம் செய்து அவனால் சிறையில் வைக்கப்பட்டிருக்கும் அரசர்களைச் சிறையிலிருந்து மீட்டினால் நாம் ராஜசூயம் நடத்தலாம்."

இவ்வாறு கண்ணன் சொன்னதைக் கேட்ட யுதிஷ்டிரன், "நீர் சொல்லுவது சரியே. தத்தம் நாட்டில் சிறப்புடன் வாழும் அரசர்கள் என்னைப் போல் அநேகர் இருக்கிறார்கள். அடைய முடியாத பதவியைப் பற்றி ஒருவன் ஆசைப்படுவதில் பயனில்லை. சம்ராட் பதவியை என்னைப் போன்றவன் விரும்புவது தவறு. கடவுள் படைத்திருக்கும் இந்த பூமி மிகப் பெரியது. அளவிறந்த செல்வம் கொண்டது. தத்தம் நாட்டில் அரசு புரிந்து கொண்டு அநேக ராஜாக்கள் திருப்தியாக இருக்க முடியும். ஆசைக்கு அளவில்லை. ஆகையால் நான் இந்த சாம்

பேச வந்தாலும் இரண்டொரு வார்த்தையில் பேச்சை முடித்துக்கொண்டு போய் விடுவாள்.

## 4

அலமேலு பாக்கியத்திற்கு எப்பொழுதோ ஐந்து ரூபாய் கைமாற்றுகக் கொடுத்திருந்தாள். ரொம்பப் பணமுடையாயிருக்கவே, அதை வாங்கி வருவதற்காக அன்று விளக்கு வைக்கும் நேரத்தில் அவள் பாக்கியத்தின் வீட்டுக்குப் போனுள். அந்த வீட்டை அணுகும்போது, அவளையு மறியாமல் அவள் கால்கள் பின்வாங்கின. உள்ளேயிருந்து ஏதோ பேச்சுக் குரல் கேட்டது. ஆம்; பாக்கியம் தான் உள்ளே பேசிக்கொண்டிருந்தாள். அவளுடன் பேசியது தங்கவேலுதான். உடனே திரும்பி விடலாமா என்று நினைத்தாள் அலமேலு. ஆனுல் தன் பெயர் உள்ளே அடிபடுவதைக் கேட்டு ஒரு கணம் நின்ருள்.

"நீ ஆம்புள்ளைதானே! உன்னைக் கலியாணம் பண்ணிக்கச் சம்மதமா, இல்லையா என்று அவளையே கேட்டுப்பிடு!"

"உன் பேச்சைப் பாரு! நீ கேட்கப்படாதா? என்னைக் கண்டால் சீறி விழுருளே!"

"எங்கிட்டயும் அப்படித்தான் இருக்கா. யாரோ ஒரு சொந்தக்காரப் பையன் வாரத்துலே இரண்டு தடவை அவளுக்குக் கடிதாசி எழுதிக்கிட்டு இருக்கான். அவன் மேலே தான் அவளுக்குப் பிரியம் போலிருக்கு. அவள் உன்னை லட்சியம் பண்ணுவாளா? நான் சொன்னுத்தான் கேட்பாளா?"

அப்பொழுது வாசலில் நிழல் தெரிவதைப் பார்த்து, பாக்கியம் 'யாரது?' என்று கேட்டுக்கொண்டே வெளியே வந்தாள். கற்சிலைபோல் நின்றுகொண்டிருந்த அலமேலுவைப் பார்த்து ஆச்சரியத்தால் கூவினுள். தங்கவேலுவும் ஓடி வந்தான்.

"அலமேலு!" என்று ஏதோ சொல்ல வாயெடுத்தாள் பாக்கியம்.

"ஆமாம்; நான் வீரப்பனைத்தான் கல்யாணம் செய்து கொள்ளப் போறேன். இதை நல்லாத் தெரிஞ்சுக்கச் சொல்லு!" என்ருள் அலமேலு.

"அண்ணே! கேட்டுக்கிட்டியா?" என்ருள் பாக்கியம்.

"அண்ணனு?" என்று ஆச்சரியத்துடன் கூவினுள் அலமேலு.

"ஆமாம்; எங்க பெரியப்பா மவன் தங்கவேலு! தாய் தகப்பன் ஒத்தரும் இல்லையாது. நாங்க இங்கே இருக்கிறது அவனுக்குத் தெரியாது. நான் தற்செயலா அவனைப் பார்த்தேன். பார்த்ததுலேயிருந்து உன்னைப் பத்தித்தான் பேசிக்கிட்டிருக்கான். ஆனுல் அவனுக்கு நல்ல காலம் வரவேணுமா?"

இந்தச் சமயத்தில் "பாக்கியம்!" என்று அலமேலு கூப்பிட்டுவிட்டு, "நான் வீரப்பனைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகிறதில்லை" என்ருள் மெதுவாக.

"அப்படியானுல்..." என்று தங்கவேலு உரக்கக் கேட்டான்.

அலமேலு வேகமாக நடந்து வெளியே போய்விட்டாள்.

"போ! சுத்த அசட்டுப்பிள்ளையாயிருக்கயே! அவளை இழுத்துக் கொண்டுவந்து இங்கேயே தாலியைக் கட்டு!" என்ருள் பாக்கியம்.

ஆனுல் அவன் அப்படிச் செய்யவில்லை. ஏனெனில், இத்தனை நாளாக அலமேலு தன்னை ஏமாற்றி வந்தவளாகையாலும், வீரப்பனுக்குப் பட்டை நாமத்தைக் குழைத்துப் போட்டவளாதலாலும் ஒரு நல்ல நாளில் நாலு பெரிய மனிதர்களைச் சாட்சியாக வைத்துக் கொண்டுதான் தங்கவேலு அவளுக்குத் தாலி கட்டினுன்.

---

★

## ரொம்ப சரி!

ஆசிரியர்:—மணி, பையன்களிடம் ஒரு கேள்வி கேட்டவுடன் சாதாரணமாய் வரக்கூடிய பதில் என்ன?

மணி:—எனக்குத் தெரியாது, சார்!

ஆசிரியர்:—ரொம்ப சரி!

★



இரண்டு தடவை கடிதம் எழுதுவான் என் பதில் சந்தேகம் இல்லை; அந்தக் கடிதத்தைத் தங்கவேலு நிச்சயம் கொடுக்க வருவான் அல்லவா? — அதுதானே அவளுக்கு வேண்டியது?

**பா**க்கியமும் அலமேலுவும் கோவிலுக்குப் போய்க் கும்பிட்டுவிட்டு மாலை நேரத்தில் மஞ்சள் வெய்யிலில் வீடு திரும்பிக் கொண்டிருந்தார்கள். தூரத்தில் தபால்காரன் சைக்கிளில் வேகமாக வந்து கொண்டிருப்பதை அலமேலு பார்த்து விட்டாள்.

"பாக்கியம்! தலையை வலிக்கிறது! நான் வீட்டுக்குப் போகிறேன். சாயங்காலம் பார்க்கலாம்" என்று அவள் சொல்லி விட்டுப் போனது பாக்கியத்திற்குப் பெரும் வியப்பை அளித்தது.

அலமேலு வீட்டுக்கு வருவதற்கும் தபால்காரன் வருவதற்கும் சரியாயிருந்தது. தபால்காரன் அவள் கையில் கடிதத்தைக் கொடுத்து விட்டுத் திரும்பினான். ஒரே சமயத்தில் அலமேலு உள்ளே போகவும், தபால்காரன் வெளியே போகவும் திரும்பினார்கள். பிறகு, ஒரே சமயத்தில் சற்று தூரம் சென்ற பிறகு இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

இந்தக் காட்சியைத் தூரத்திலிருந்து பார்த்துக் கொண்டிருந்தாள் பாக்கியம். வெகு நாளாகவே அலமேலு ஒரு தினுசாக நடந்து கொண்டு வருவது அவளுக்குத் தெரிந்துதானிருந்தது. அதற்கு என்ன காரணம் என்று இத்தனை நாளாய் அவள் தெரிந்து கொள்ள முயற்சி செய்தாள். இப்பொழுதுதான் அவளுக்கு விஷயம் விளங்கிற்று. அலமேலுவுக்கு ஏதோ கடிதம் வந்திருக்கிறது; அந்தக் கடிதத்தை வாங்கிக் கொள்வது தனக்குத் தெரியக்கூடாது என்பதற்காகவே முதலில் தன்னை அனுப்பி விட்டாள் — என்பதை அவள் ஊகித்துக் கொண்டாள்.

மறுபடியும் அவள் அலமேலுவைச் சந்தித்தபோது அக்கடிதத்தைப் பற்றி விசாரித்தாள். அத்தை மகளிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது என்று மட்டும் அலமேலு சொன்னாளே தவிர, வேறு ஒன்றும் சொல்லவில்லை.

3

**நா**லு நாளைக்கொரு தடவை தபால்காரன் அலமேலு வீட்டுக்கு வந்து கடிதம் கொடுத்து விட்டுப் போவது வழக்கமாக இருந்ததைப் போலவே அவர்கள் சந்திக்கும் போது ஒருவரை யொருவர் கடைக்கண்ணால் பார்த்துக் கொள்வதும் வழக்கமாகி விட்டது.

"ஆமாம்; உனக்குச் சொந்தக்காரர்கள் யாரும் கிடையாதா?" என்று ஒரு நாள் கேட்டான் தங்கவேலு.

"இல்லை" என்று பதில் சொல்லிவிட்டுத் திரும்பினாள் அலமேலு.

"கேட்டுக்கிட்டே இருக்கேன், ஓடறியே? உனக்கு இங்கே ஒண்டியா இருக்கப் பயமா இல்லே?"

"இல்லை."

"இல்லேனு ஏன் என்னைக் கண்டுப்பிட்டு ஓடறே? இந்தக் காலத்துலே பொண்பிள்ளைகளைக் கண்டுல்லே நாங்க பயப்படணும்?" என்று சொல்லி விட்டு, "ஆமாம்; நாலு நாளைக்கு ஒரு தடவை கடுதாசி வருதே. அது ..." என்று இழுத்தான் தங்கவேலு.

"யார் கிட்ட யிருந்து வந்தால் உனக்கு என்ன?" என்று பளிச்சென்று கேட்டாள் அலமேலு.

"அது எங்கே யிருந்து வந்தால் எனக்கு என்ன? நான் அதைப் பற்றிக் கேட்கலே. அது வாறதுனாலேதான் இங்கே வந்து உன்னைப் பார்க்க முடியுதுன்னு சொல்ல வந்தேன்!"

"சரிதான் போ, வேலையைப் பார்த்துக் கிட்டு!" என்றாள் அலமேலு.

அவள் அவ்வாறு சொன்னதைக் கேட்க இஷ்டமில்லா விட்டாலும், கதை வளரக் கூடாது என்ற நல்லெண்ணத்துடன் தபால்காரன் சைக்கிளில் புறப்பட்டுச் சென்றான்.

**ம**று நாள் சாயங்காலம் கோவிலுக்குப் போவதற்காக வந்த அலமேலு எதையோ பார்த்து விட்டுத் திடுக்கிட்டு நின்றாள்! அவள் மனதைக் கவர்ந்த தங்கவேலு பாக்கியத்தின் வீட்டெதிரில் அவளுடன் பேசிக் கொண்டு நின்றதுதான் அவள் திகைப்புக்குக் காரணம். அவன் பேசும் தோரணையையும் பாக்கியம் அவனுடன் சிரித்து விளையாடும் மாதிரியையும் பார்த்ததும் அவளுக்குச் 'சுரேல்' என்றது. அவள் சொல்ல முடியாத வேதனையுடன் தன் வீட்டுக்குத் திரும்பி வந்தாள்.

பொறாமைத் தீ அவள் உள்ளத்தில் கொழுந்துவிட்டு எரிய ஆரம்பித்தது. இந்தச் சம்பவத்திற்குப் பிறகு அலமேலு பாக்கியத்துடன் கலகலப்பாகப் பேசவில்லை. அவள்

என்னவெல்லாம் எழுதுவானே, அதெல்லாம் அவன் கடிதத்தில் எழுதியிருந்தான். அந்தக் கடிதத்தை முழுதும் படிப்பதற்குள்ளாகவே, அலமேலு அதைக் கிழித்தெறிந்து விட்டாள்.

ஆனால், அந்தக் கடிதம் வந்ததிலிருந்து அலமேலு எதிலும் நிலைகொள்ளாமல் இருந்தாள் — நிஜத்தைச் சொல்லப்போனால், கடிதத்தை அந்தத் தபால்காரன் கொண்டு வந்து கொடுத்ததிலிருந்து என்று தான் சொல்லவேண்டும்.

அந்தத் தபால்காரனின் குறுகுறுப்பான பார்வையும், அதில் இருந்த விஷமமும், அவள் மனதில் ஆழமாய்ப் பதிந்துவிட்டன. அப்படித் தன் புத்தி கெட்டுப் போவானேன், அப்படிப் போனாலும் அவனை எண்ணும்போது நெஞ்சு அப்படி அடித்துக் கொள்வானேன், நெஞ்சுதான் அடித்துக் கொள்கிறதென்றால், இப்படி ஆழ்ந்த பெருமூச்சு விடுவானேன்? — என்று புரியாமல் அலமேலு விழித்தாள்.

## 2

அன்று அலமேலு வாசற் பக்கத்தில் கூந்தலை உலர்த்திவிட்டுக் கொண்டே நின்று கொண்டிருந்தாள். தென்றல் காற்று அவளது சுருண்ட கேசத்தைத் தடவிக் கொடுத்துச் சென்றது. வாசற்பக்கம் அவள் பார்வை அடிக்கடி சென்று திரும்பியது.

“இந்தப் பாழும் ஊரில் தபாலாபீஸா மண்ணாங் கட்டியா ஒன்றும் கிடையாதா? வாரத்தில் யாரோ ஒருவருக்கு ஒரு கடிதாசல்லவா வருகிறது? இதுவும் ஒரு ஊரா?” என்று அவள் வருந்தினாள். அந்த வருத்தத்துக்கு மூலகாரணம் அந்தத் தபால்காரன் என்று சொல்லவா வேண்டும்?

பளிச்சென்று அலமேலுவுக்கு ஒரு எண்ணம் தோன்றிற்று. அளவிட முடியாத ஒரு ஆனந்தம் அப்பொழுது அவளுக்கு உண்டாயிற்று. உள்ளே ஓடிப்போய் ஒரு காகிதத்தை எடுத்தாள். மூலையில் தேடி ஒரு பென்ஸிலைக் கொண்டு வந்தாள்.

வெகு நாழிகை சிரமப்பட்டு ஒரு கடிதம் எழுதி முடித்தாள். அந்தக் கடிதம் வேறு யாருக்கு மில்லை; வீரப்பனுக்குத்தான்! அவன் கடிதம் வந்து சேர்ந்ததென்றும், அத்தையின் சௌகரியத்திற்கு வாரத்திற்கு இரண்டு தடவை கடிதம் எழுதும்படியும் அதில் கேட்டிருந்தாள். அவன் கடிதத்தைப் பார்த்து அவள் ஆத்திரப்பட்டதாகவோ, அல்லது ஆனந்தப் பட்டதாகவோ காட்டிக் கொள்ளவில்லை. இன்றைக்கு அவள் எழுதியதை வைத்துக் கொண்டு நாளைக்கு அவன் ஒன்றும் சொல்ல முடியாதபடி எதிலும் பட்டுக் கொள்ளாமல் எழுதினாள்.

ஏதோ சாதிக்க முடியாத காரியத்தைச் சாதித்து விட்டவள்போல் ஆனந்தப்பட்டாள் அலமேலு. நிச்சயமாக வீரப்பன் வாரம்



# கடிதமும் கல்யாணமும்

வஸந்தா

இரண்டு வருஷங்களுக்கு முன், பாக்கியத்தை முதன் முதலில் பார்த்ததுமே, "வெகு நாளாக நாம் தேடிக்கொண்டிருந்த சிநேகிதி இவள்தான்" என்று அலமேலு அறிந்து கொண்டாள். அப்பொழுதிருந்தே ஒருவரை யொருவர் நேசிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

அலமேலு ஒரு காரியம் செய்தால் பாக்கியமும் கூடவே செய்வாள். உதாரணமாக, அலமேலு வாசலில் நெல்லை உலர்த்திவிட்டுத் தூங்கிப் போனபோது, ஒரு மாடு வந்து மேய்ந்து கொண்டிருந்தது. அருகிலிருந்த பாக்கியம் அதை விரட்ட முடியாமல் அவளும் தூங்கிக் கொண்டிருந்தாளென்றால் அவர்கள் நட்புக்கு இதை விட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்!



ஒருநாள், "யார் அது உள்ளே? அலமேலு இருக்கிறது இங்கே தானே?" என்று யாரோ கேட்கும் சத்தம் கேட்டு வாசலுக்கு வந்தாள் அலமேலு. யாரோ ஒரு தபால்காரன் நின்று கொண்டிருந்தான். அவனை ஒரு கணம் அவள் உற்றுப் பார்த்தாள். அவன் வழக்கமாக வரும் புலிமூஞ்சித் தபால்காரன் அல்ல. இவனுக்குச் சுமார் இருபத்தைந்து வயதிருக்கும்.

"கேட்கிறேன், பேசாமல் இருக்கிறாயே? வாயில் கொழுக்கட்டையா இருக்கிறது?" என்று கேட்டான் தபால்காரத் தங்கவேலு.

"ஆமாம்; நான்தான் அலமேலு!" என்றாள் அவள். தபால்காரன் ஒரு கடிதத்தை அவள் கையில் கொடுத்துவிட்டுத் திரும்பினான்.

"யார் கடிதாசி எழுதியிருப்பார்கள்?" என்று எண்ணிக்கொண்டே அவள் தபால் கட்டை உடைத்தபோது, அவள் கண்கள் அந்தத் தபால்காரனைப் பார்க்க அலைந்தன. அவன் அதற்குள் ஸைகிளில் ஏறிக்கொண்டு பின்னால் திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்றான்.

அலமேலு அந்தக் கடிதத்தைப் படித்து முடித்ததும், அவள் முகத்தில் சற்று நேரம் என்னும் கொள்ளும் வெடித்தது. அந்தக் கடிதத்தைச் சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டாள். அது வீரப்பன் அவளுக்கு எழுதிய கடிதம்தான்.

வீரப்பன் அவள் அத்தை மகன். வெகு காலம் வரை தன்னைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி வீரப்பன் அவளை வற்புறுத்தி வந்தான். அவன் ஒரு அயோக்கிய சிகாமணி என்பதை அவள் அறிந்திருந்த படியால், அவனைக் கல்யாணம் செய்து கொள்வதில் அவளுக்குக் கொஞ்சமும் இஷ்டம் இல்லை. ஆனால், 'மாட்டேன்' என்று சொன்னால் அத்தையின் மனம் புண்ணாகும் என்ற காரணத்தினால், 'ஆகட்டும், பார்க்கலாம்' என்று தட்டிக் கழித்துக்கொண்டிருந்தாள்.

நல்ல வேளையாக, போன வருஷம் வீரப்பனுக்குச் சென்னைப் பட்டணத்தில் ஒரு ஒர்க்ஷாப்பில் வேலை கிடைத்தது. அவன் பட்டணத்திற்குப் புறப்பட்டுப்போன செய்தியைக் கேட்டு அலமேலு பெருமூச்சு விட்டாள். "இனிமேல் அவன் தொந்தரவு இராதல்லவா? அவன் உபத்திரவம் ஒழிந்ததல்லவா?" என்று எண்ணிச் சந்தோஷித்தாள்.

ஒரு வருஷத்திற்குப் பிறகு, அவனிடமிருந்து வந்த கடிதந்தான் இது. ஒரு அசட்டுப் பிள்ளை ஒரு வயசுப் பெண்ணுக்கு

# மிகப் பத்திரமுள்ள சேமிப்புத் திட்டம்

யுத்தம் நின்று, சமாதானம் நிலவும் போது சேமித்த பணமெல்லாம் மாயமாக மறையுமென்றால், வருங்காலத்திற்காக சேமிப்பதின் பயன் என்ன? தங்கம், வெள்ளி, நகைகள் வீடு வாசல்கள், விற்பனைச் சரக்குகள் வாங்குவதில் உங்கள் சேமிப்பை முதலிட்டால், உங்கள் பணத்திற்கும் இக்கதிதான் நேரும். இப்பொழுதிருந்தே இந்தப் பொருள்களின் அநியாய விலைகள் சாதாரண அளவுக்கு இறங்குமென்று எதிர்பார்க்கலாம். உங்கள் சேமிப்பு அப்பொழுது என்ன ஆகும்?

யுத்த காலத்தில் விஷயம் தெரியாதவர்கள் விலை யேற்றத்தைக் கவனியாமல் தங்கம், வெள்ளி, வீடு வாசல்களை கண்ணை மூடிக் கொண்டு வாங்குவதால் ஏராளமான பணத்தை இழக்கிறார்கள் என்பதை எல்லோரும் அறியவேண்டியது அவசியம். நீங்கள் இம்மாதிரியான கஷ்டத்திற்கு ஈடாகாதீர்கள். மிச்சப்படுத்தும் பணத்தைக் கொண்டு நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வாங்குங்கள். இந்த சர்ட்டிபிகேட்டுகள் ஒவ்வொன்றும் ரூபாய் 10 தான். 12 வருஷங்களுக்குப் பிறகு அதன் உத்திரவாதமுள்ள மதிப்பு ரூபாய் 15.

முதல் மூன்று வருஷங்களுக்குப் பிறகு எப்பொழுது வேண்டுமானாலும் நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை பணமாக மாற்றிக் கொள்ளலாம். இந்த சர்ட்டிபிகேட்டுகளில் முதலிட்ட தொகைகளுக்கு வருமான வரி கிடையாது. ஒவ்வொருவரும் ரூ. 5,000 வரைக்கும் இந்த சர்ட்டிபிகேட்டுகளை வாங்கலாம்.

## நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை

**வாங்கிச் சேமித்த பணம்**

**என்றும் பத்திரமானது**

## பதிவு செய்தல் — ஒரு நல்ல முன்னேற்பாடு.

அஸாம், வங்காளம், பீஹார், ஒரிஸா, சென்னை மாகாண வாசிகளின் சௌகரியத்துக்காக, லக்ஷ்மணபுரியில் ஐக்கிய மாகாண போஸ்ட் மாஸ்டர் ஜெனரலின் மேற்பார்வையில் ஒரு மத்தியப் பதிவு ஆபீஸ் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. இங்கு டிபென்ஸ் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகள், தபாலாபீஸ் காஷ் சர்ட்டிபிகேட்டுகள், நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வைத்திருப்பவர்கள் தங்கள் சர்ட்டிபிகேட்டுகளின் விபரங்களை இலவசமாகப் பதிவுசெய்து கொள்ளலாம். இதன் மூலம், சர்ட்டிபிகேட்டுகள் காணாமற் போனாலுஞ்சரி, அழிந்து விட்டாலுஞ்சரி, தங்கள் உரிமையை நிரூபிப்பது சுலபம். பூரா விபரங்களையும் உங்களூர் தபாலாபீஸில் கேட்டுத் தெரிந்துக் கொள்ளுங்கள்.

**சேவிங்ஸ் பாங்கி உள்ள எந்தத் தபாலாபீஸிலும் நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வாங்கலாம்.**

CPU—415

# காலக்ஷேபம்

### சரிதான்!

பிரசங்கதார் :—ஏண்டா, சுப்பா! நம்ம மேட்டுக் காட்டுக்கு ஆத்து வண்டல் மண் அடிக்கச் சொல்லி ஐந்து ரூபாய் அட்வான்ஸ் கொடுத்து மாசக் கணக்காச்சே, எப்படா அடிக்கப் போறே?



குடியானவன் :—எஜமான்! அந்த ரூபா செலவழிஞ்சு போச்சுங்க. இன்னும் ஒரு அஞ்சு குடுத்திங்கின்னா இதுக்கும் சேத்து மண்ணடிச்சுப்புடறேனுங்க! —சி. ஸ்ரீநிவாசன்.

○

### நல்ல வேலை!

சோமு :—டேய்! கலியாணமானவுடன் உனக்கு வேலை பார்த்துத் தருவதாக உன் மாமனார் சொல்லி இருந்தாராமே, அப்படிச் செய்தாரா?

ராமு :—ஆம்! செய்திருக்கிறார்.

சோமு :—என்ன வேலை?

ராமு :—அவருடைய இரண்டாவது பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடுகிற வேலை! —கே. மகாதேவன்.

○

### என்ன வரும்?

உபாத்தியாயர் (பையன்களைப் பார்த்து) :—இந்தக் கணக்கு உங்களுக்குத் தெரியவில்லையே! போகட்டும், உங்கள் நால்வருக்கும் 100 வாழைப்பழமும், 60 மாம்பழமும் கொடுத்தால் ஒவ்வொருவருக்கும் என்ன வரும்?



சிறிய பையன் :—வயிற்றுவலி, ஸார்!

—அ. சம்பந்தன்.

### கிளியின் கெடுதல்

வியாபாரி :—ஏனையா! கிளி வாங்கி ஆறு மாதத்திற்கு அப்புறம் கொண்டு வருகிறீர்களே! நீர் திருப்பிக் கொடுக்கும்படியான கெடுதல் கிளியிடம் என்ன இருக்கிறது?



வாங்கியவன் :— அ......அ......அது....தி....தி....திக்கிப்...பே.........பே......பேசுகிறது. —எஸ். வி. ஜயலக்ஷ்மி.

○

### சரியான சமயம்!

பட்டு :—எங்காத்துக்காரர் ஆபீஸிலிருந்து வருவதற்கு அரைமணி முந்தியே தோசை காப்பி எல்லாம் 'ரெடி' பண்ணி விடுவேன்.

சீதா :—நான் அவசரப்படுவதில்லை. அவர் தலையைக் கண்ட பிறகுதான் கல்லைப் போடுவேன்! —எஸ். கோமதி.

○

### எழுத்து வேலை!

ரங்கன் :—உன் பிள்ளை பம்பாய்க்குப் போயிருக்கிறானே, அங்கே என்ன வேலை செய்கிறான்?

ராஜு :—எழுத்து வேலை செய்கிறான்.

ரங்கன் :—குமாஸ்தா வேலையா, அல்லது பத்திரிகை, புஸ்தகம் முதலியவைகளுக்கு எழுதுகிறானா?

ராஜு :—இல்லை, பணம் அனுப்பும்படி எனக்கு எழுதிக் கொண்டு இருக்கிறான்! —எஸ். ஜி. ராஜன்.

○

### நியாயந்தான்!

வீட்டுக்காரர் (வண்ணானிடம்) :—ஏன் அப்பா! நீ தொலைத்த வேஷ்டிக்குக் காசு கேட்கிறாயே, நியாயமா?



வண்ணான் :—இல்லீங்க! வெளுத்தத்துக் கப்புறந்தானுங்க தொலைஞ்சது! —ந. இராமதுரை.

கொஞ்சம் காற்று வேகமாக அடித்தால் பறந்தே போய் விடுவாய்" என்று ரொம்பவும் அலட்சியமாகச் சொல்லி விட்டுப் பக்கத்திலிருந்த பொம்மையைப் பார்த்தது. "ஓகோ! பூனைப் பொம்மையோ? நீ களிமண்ணால் அல்லவா செய்யப்பட்டிருக்கிறாய்? அதனால்தான் உன் மூளையும் களிமண்ணாக இருக்கிறது. உன் பார்வையும் மந்தமாக இருக்கிறது உன்னை விரும்புபவர்கள் யாரும் இல்லை. என் தலையை அமுக்கினால் உண்டாகும் சப்தத்தைக் கேட்டுக் குழந்தைகள் சந்தோஷமடைகிறார்கள். உன் களிமண் தலையை அமுக்கினால் அவர்கள் கைதான் வலிக்கும். அதுவுமல்லாமல் நான் தூக்குவதற்குக் கனமில்லாமலிருக்கிறேன்" என்று புலிப் பொம்மை சொல்ல, பூனைப் பொம்மை "ஆமாம், ஆமாம்! பொம்மையாக இருந்துகூட நான் பூனையாகத்தானிருக்கிறேனே தவிர, தங்களைப் போலப் புலியாக இல்லை" என்று புலிப் பொம்மையைத் தூக்கி வைத்தே பேசிற்று.

**பு**லிப் பொம்மை "வாருங்கள்! சற்று நேரம் தோட்டத்தில் உலாவி வரலாம்" என்று சொல்ல, மரப்பாச்சி, பூனைப் பொம்மை, வாத்துப் பொம்மை எல்லாம் புலிப் பொம்மையைத் தொடர்ந்து சென்றன. தோட்டப் பக்கம் சென்றவுடன் எதிர்பாராமல் திடீரென்று பலத்த மழை பெய்தது. மரப்பாச்சியும் பூனைப் பொம்மையும் ஓடோடியும் சென்று வீடடைந்தது. வாத்துப் பொம்மை மழை ஜலத்தில் மிதந்து கொண்டே வீடு வந்தது. ஆனால் பாவம், புலிப் பொம்மையும் வேகமாக ஓடி வந்தது. பாதிதூரம் வந்ததும், அதனால் நகர முடியவில்லை.



அது கம்பளி நூலால் செய்யப்பட்டதால் மழைஜலம் ஊறவே உடம்பு கனத்துவிட்டது. தோட்டத்திலேயே இரவு முழுவதும் கொட்டுகிற மழையில் அது மாட்டிக்கொண்டது.

**ம**றுநாட் காலையில் பாலு தன் புலிப் பொம்மையைக் காணோம் என்று வீடு முழுவதும் தேடினான். அப்பொழுது பாலுவின் வீட்டு நாய் ஏதோ ஒன்றைத் தோட்டத்திலிருந்து வாயில் கௌவிக்கொண்டு வந்தது. வாயில் கௌவிக்கொண்டு வந்ததைப் பாலுவின் எதிரில் கொண்டு வைத்தது. "அடாடா! புலிப் பொம்மையல்லவா இது? அடையாளமே தெரியவில்லையே! தலையை அமுக்கினால் இப்பொழுது சப்தம்கூட வரவில்லையே! நன்றாக வெய்யிலில் காய்கிறவரையில் இதைக் கையில்கூட எடுக்கக் கூடாது" என்று சொல்லிக்கொண்டே பாலு உள்ளே சென்றான். மற்றப் பொம்மைகள் இந்த வேடிக்கையைப் பார்த்து வாய்க்குள் சிரித்துக் கொண்டன.

புலிப் பொம்மை அவமானத்தினால், ஒன்றும் பேசவில்லை. அன்று முதல் அது கர்வத்தை விட்டு மற்றப் பொம்மைகளுடன் சிநேகமாக இருந்தது.






புலிப் பொம்மையை அன்றுதான் பாலுவின் தகப்பனார் வாங்கி வந்தார். பாலு ஓடோடியும் சென்று புலிப் பொம்மையைக் கையி லெடுத்துக் கொண்டு கூத்தாடினான். தன்னிடமுள்ள மற்றப் பொம்மைகளைக் காட்டிலும் புலிப் பொம்மையிடம் பாலு அதிக ஆசை காட்டினான்.

உண்மையாகவே புலிப் பொம்மை பார்ப்பதற்குச் சின்னப் புலிக் குட்டியைப்போலவேதான் இருந்தது. அதன் கழுத்தில் ஒரு சிறிய மணி கட்டியிருந்தது. அதன் உடல் உயர்ந்த கம்பளி நூல்களினால் செய்யப்பட்டிருந்தது. இரவில் படுக்கும் பொழுது புலிப் பொம்மையைத் தன் பக்கத்திலேயே மெத்தையில் படுக்க வைத்துக் கொள்ளுவான் பாலு.

ஒரு நாள் பாலு மறந்து போய்ப் புலிப் பொம்மையை வழக்கம்போல் தன் மெத்தையில் படுக்க வைத்துக் கொள்ளாமல் மற்றப் பொம்மைகளுடன் வைத்திருந்தான். அப்பொழுது அவ் வீட்டில் எங்கும் நிச்சப்தமாக இருந்தது. புலிப் பொம்மையின் முகத்தில் சற்றுக் கோபக்குறி தோன்றியதை மற்றப்பொம்மைகள் பார்த்தன. "சே! இவைகளுடனா என்னைக் கொண்டு வைப்பது? நான் யார்? இவை யார்? ஒரு வாரத்திற்கு முன்பு நான் ஒரு வெள்ளைக்காரக் கம்பெனியில் அல்லவா இருந்தேன்? இன்று என்னோடு இருக்க லாயக்கில்லாத இப் பொம்மைகளுடன் அல்லவா நான் இருக்க நேரிட்டது? இது தெரிந்திருந்தால் இவ் வீட்டிற்கு நான் வந்திருக்கமாட்டேனே!" என்று முணுமுணுத்தது.

புலிப் பொம்மை இறுமாப்புடன் மற்றப் பொம்மைகளைக் கடைக் கண்ணால் பார்த்தது. "ஓஹோ! அதோ மரம் மாதிரி நிற்பது மரப் பாச்சியா? என்னைப் போல அழகான மிருதுவான கம்பளி நூலால் செய்யப்பட்டிருந்தால் உன்னை எல்லோரும் விரும்புவார்கள். உன்னைக் கண்டால் யாருக்குப் பிடிக்கும்?" என்றது புலிப் பொம்மை. அதற்கு நல்ல குணம் வாய்ந்த மரப் பாச்சி "ஆமாம், ஆமாம்! உம்முடைய அழகு எனக்கு வருமா? நான் அழகு இல்லாவிட்டாலும் நானில்லாமல் ஒரு வீடும் கிடையாது. நானிருப்பது திருப்பதி மலைதான். திருப்பதிக்கு வருகிறவர்கள் எல்லோரும் என்னை வாங்கிக் கொண்டுவர மறக்க மாட்டார்கள்" என்று மெல்லிய குரலுடன் சொல்லி விட்டுப் பேசாமலிருந்தது.



புலிப் பொம்மை ஏளனமாகச் சிரித்துக் கொண்டே, "அது என்ன வாத்துப் பொம்மையா? குழந்தைகள் அவசரத்தில் உன்னை எடுத்து விளையாடினாலே போதும். அப்படியே நசுங்கிப் போய் விடுவாயே! அதுவுமல்லாமல்




## அரைக்கீரை விதைத் தைலம்

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும் அநேக பச்சிலைகளும் சேர்த்து தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இரு முறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண் எரிச்சல், கண் மறைபபு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக் கூடியது.

●

# கோகுல் சோப்

(மிருகக் கொழுப்பற்றது)

ஆடைகளை தூய வெண்மையாக்குவதில் நிகரற்றது.

பெரிய பார்களாகவும் சிறு கட்டிகளாகவும் குறைந்த விலையில் கிடைக்கும்.

●

தயாரிப்பவர்கள் :

## டி.எஸ்.ஆர்.

மதராஸ் ஸோல் ஏஜெண்டுகள் :

**மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

பைக்ராப்ட்ஸ் ரோடு — திருவல்லிக்கேணி

●

பாலக்காட்டுக்கு ஸோல் ஏஜெண்டுகளும்
கோயமுத்தூருக்கு ஸ்டாக்கிஸ்டுகளும்

**தி சதர்ன் இந்தியா ஏஜன்ஸீஸ்**

அவநாசி ரோடு — கோயமுத்தூர்

சந்திப்பேன். நீ என்னுடன் வர ஆயத்தமாயிரு!" என்றான்.

பரஞ்சோதி அகமும் முகமும் மலர்ந்தவனாய், "ஐயா! தங்களுடன் பிரயாணம் செய்வதாயிருந்தால் நரகத்துக்கு வேணுமானாலும் நான் வரச் சித்தம். தங்களிடம் கதை கேட்க அவ்வளவு ஆவலாயிருக்கிறது!" என்றான்.

"பையன் என்ன சொல்கிறான்?" என்று புலிகேசி கேட்டதற்கு, "பிள்ளையாண்டான் பலே கைகாரன்; தான் கொண்டு வந்த ஓலை தங்களுக்கு இல்லையென்றால் தன்னிடமே திருப்பிக் கொடுத்து விடும்படி கேட்கிறான். இளங் கன்று பயமறியாது என்று தமிழிலே ஒரு பழமொழி உண்டு!" என்றான் வஜ்ரபாஹு.

புலிகேசி சிரித்துவிட்டு, "அப்படியா? நல்லது; ஓலையைப் பையனிடமே கொடுத்து வைக்கலாம். அவனுக்குத் தன் தலையைக் காட்டிலும் ஓலையிடத்தில் அதிக ஆசை போலிருக்கிறது! இப்போதைக்கு அவனுடைய கட்டை அவிழ்த்து விடுங்கள்!" என்றான்.

ஓலை பரஞ்சோதியிடம் கொடுக்கப்பட்டதோடு, அவனுடைய கட்டுக்களும் உடனே அவிழ்த்து விடப்பட்டன. பிறகு, அவனை இராஜ சமூகத்திலிருந்து அழைத்துச் சென்றார்கள்.

* * *

**ம**றுநாள் அந்தி மயங்கும் சமயத்தில் பரஞ்சோதியும் அவனுக்கு முன்னும் பின்னுமாகச் சென்ற ஒன்பது வீரர்களும் காட்டு மலைப் பாதையில் ஒரு சிறு கணவாயைத் தாண்டி—அப்பால் சற்றுத் தூரத்திலிருந்த ஒரு பழைய பாழடைந்து காணப்பட்ட, ஏகாந்த வீட்டை அடைந்தார்கள். அந்த வீட்டின் வாசல் திண்ணையில் ஒரு முதிய கிழவன் உட்கார்ந்திருந்தான். தலையும் தாடியும் நரைத்த அக்கிழவன் உலகப் பிரக்ஞையே யற்றவனாய்க் கையிலிருந்த ஜபமாலையை உருட்டிக் கொண்டிருந்தான். பத்துக் குதிரைகள் சேர்ந்தாற்போல் வந்து அவ்வீட்டின் வாசலில் நின்றதைக்கூட அவன் பொருட்படுத்தவில்லை. கண்ணைத் திறந்து ஒருகணம் பார்த்துவிட்டு, மறுபடியும் கண்களை மூடிக் கொண்டான்.

வந்த வீரர்களில் ஒருவன் கிழவனை என்னவோ கேட்க, அவனும் இரண்டொரு வார்த்தையில் மறுமொழி கூறினான்.

அன்றிரவு அந்தப் பாழ் வீட்டிலேயே தங்குவதென்று அவ்வீரர்கள் முடிவு செய்தார்கள்.

நாளெல்லாம் பிரயாணம் செய்திருந்த குதிரைகளுக்குத் தாங்கள் உடன் கொண்டு வந்திருந்த தீனியைக் கொடுத்து விட்டு, தாங்களும் உணவருந்தி விட்டுப் படுத்துக் கொண்டார்கள். தங்களில் நாலு பேரை நாலு ஜாமத்துக்கும் காவல் செய்யவும் ஏற்படுத்திக் கொண்டார்கள்.

எல்லாரையும் காட்டிலும் அதிகக் களைப்புற்றிருந்த பரஞ்சோதிக்குப் படுத்தவுடனே கண்ணைச் சுற்றிக் கொண்டு தூக்கம் வந்தது. தூக்கத்தில் ஆழ்வதற்கு முன்னால் அவன் மனதில் கடைசியாக, "வஜ்ரபாஹு இன்றிரவு சந்திப்பதாகச் சொன்னாரே? இனி எங்கே சந்திக்கப் போகிறார்?" என்ற எண்ணம் தோன்றியது.

பரஞ்சோதி அன்றைக்கும் தூக்கத்தில் கனவு கண்டான். புலிகேசியின் கூரிய கழுகுப் பார்வை ஒரு கணம் அவன் நெஞ்சை ஊடுருவிற்று. "இவனை யானையின் காலால் இடறச் செய்யுங்கள்!" என்று புலிகேசி கட்டளையிடுகிறான். பரஞ்சோதி யானையின் மீது வேலை எறிந்து விட்டு ஓடுகிறான். யானை அவனை விடாமல் துரத்தி வருகிறது. கடைசியில், அது கிட்ட நெருங்கி விட்டது. யானையின் துதிக்கை அவன் தோளில் பட்டதும், பரஞ்சோதி திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கிறான். பார்த்தால், யானையின் முகம் அந்த வீட்டு வாசல் திண்ணையில் உட்கார்ந்து ஜபமாலை உருட்டிக் கொண்டிருந்த கிழவனின் முகமாகவும் துதிக்கை அக்கிழவனின் கையாகவும் மாறியிருக்கின்றன.

இது கனவில்லை, உண்மையாகவே அக் கிழவன் தன்னைத் தொட்டு எழுப்புகிறான் என்பதைப் பரஞ்சோதி உணர்ந்ததும், சட்டென்று எழுந்து உட்கார்ந்தான்.

"ஆமாம்; அதனால்...?"

"இந்த ஓலை அவருக்கே இருக்கலாமல்லவா?"

"இருக்கலாம்; ஆனால் நாகநந்தி அவருக்கு இம்மாதிரி விஷயத்தைப் பற்றி எழுத நியாயமே இல்லையே?"

"பிரபு! இந்த ஓலையைப் படித்ததும் நாகநந்தி பிக்ஷு கூறிய ஒரு விஷயம் எனக்கு ஞாபகம் வருகிறது. கிருஷ்ணா நதிக் கரையோடு வேங்கி ராஜ்யத்தின் மேல் படையெடுத்துச் செல்லும் தங்கள் சகோதரருக்கும் செய்தி அனுப்ப வேண்டும் என்று அவர் சொன்னார். பிறகு, வேறு யாரிடமாவது அனுப்பிக் கொள்கிறேன் என்றார். ஒருவேளை தங்கள் சகோதரர் விஷ்ணு வர்த்தன மகாராஜாவுக்கு இதில் ஏதாவது செய்தி இருக்கலாமல்லவா?"

இதைக் கேட்டதும் புலிகேசியின் முகம் பிரகாசமடைந்தது. "வஜ்ரபாஹு! நீர் மகா புத்திசாலி. நம்முடனேயே நீர் இருந்து விடலாமே? பல காரியங்களுக்கு அநுகூலமாயிருக்கும்" என்றான்.

"பிரபு! நான் எப்படியும் திரும்பிப் போக வேண்டும். தங்களுடைய மறுமொழியை நாகநந்தி பிக்ஷுவிடம் கூறிவிட்டு, ஒரு பெரும் படையும் திரட்டிக் கொண்டு வருகிறேன். அதுவரையில் அடியேனுக்கு உத்தரவு தரவேண்டும்" என்றான் வஜ்ரபாஹு.

புலிகேசி கூறினான்:—"அதுவும் நியாயந்தான். புகழ் பெற்ற அச்சுத விக்கிராந்தருடைய வம்சத்திலே பிறந்த நீர், தன்னந் தனியாக நம்மிடம் வருவது தகாது. அவ்விதமே செய்யும். இந்தப் பையனைப் பற்றி நம்முடைய முடிவை மட்டும் இவனுக்குத் தெரிவித்து விட்டு நீர் போய் வாரும்!" என்றான்.

பிறகு, தன் படைத் தலைவர்களிடம் சிறிது கலந்து யோசித்து விட்டு, "எப்படியும் விஷ்ணு வர்த்தனனுக்கு நான் ஓலை அனுப்ப வேண்டியிருக்கிறது. ஓலையுடன் ஒன்பது வீரர்கள் போகட்டும். அவர்களுடன் இந்தப் பையனையும் அனுப்புங்கள். இவனுடைய ஓலையின் விஷயம் என் தம்பிக்கும் விளங்காவிட்டால், இவனை உடனே சிரச்சேதம் செய்யக் கட்டளையிட்டு அனுப்புங்கள்!" என்றான். பிறகு, வஜ்ரபாஹுவை நோக்கி, "இந்த விஷயத்தைப் பையனிடம் சொல்லும்" என்று ஆக்ஞாபித்தான்.

வஜ்ரபாஹு பரஞ்சோதியிடம், "தம்பி! நாகார்ஜுன மலைக்கு இங்கிருந்து சக்கரவர்த்தி ஓலையுடன் பன்னிரண்டு வீரர்கள் போகிறார்கள். அவர்கள் உன்னையும் அழைத்துப் போவார்கள். நீ கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். நாளை இராத்திரி உன்னை அநேகமாக நான் வழியில்



கட்டும். வேறு எந்த விவரமும் எனக்குத் தெரியவும் தெரியாது; தெரிந்தாலும் சொல்ல முடியாது!" என்றான்.

வஜ்ரபாஹு புலிகேசியைப் பார்த்து, "அரசர்க்கரசே! ஓலையை நாகநந்தி பிக்ஷுதான் கொடுத்ததாகவும், அதில் ஏதோ அஜந்தா வர்ணச் சேர்க்கையைப் பற்றி எழுதியிருப்பதாகவும் பிள்ளையாண்டான் சொல்கிறான். பிக்ஷு கூறிய விஷயம் ஒன்று எனக்கு ஞாபகம் வருகிறது. அந்த ஓலையை நான் பார்வையிடலாமா?" என்று கேட்டான்.

புலிகேசி ஓலையை வஜ்ரபாஹுவிடம் கொடுத்து, "இதிலிருந்து தெரியக் கூடியது ஒன்றுமில்லை. நீர் வேணுமானால் பாரும்" என்றான்.

வஜ்ரபாஹு ஓலையில் சிறிது நேரம் கவனம் செலுத்தி விட்டு, "பிரபு! நாகார்ஜுன பர்வதத்திலுள்ள புத்த சங்கிராமத்தின் தலைவரின் திருநாமம் சத்தியாச்ரய பிக்ஷுதானே?" என்று கேட்டான்.



"இந்த ஓலையில் என்ன எழுதியிருக்கிறது, தெரியுமா? கேளுங்கள் அதிசயத்தை! இந்த ஓலை கொண்டு வருகிற பையனிடம் அஜந்தா வர்ண இரகசியத்தைச் சொல்லி அனுப்ப வேணுமாம்! உங்களுக்குத் தெரியுமல்லவா? சித்தப்பனின் சிறையிலிருந்து நான் தப்பி ஓடி ஒளிந்து கொண்டிருந்த காலத்தில் அஜந்தாவில் இரண்டுவருஷம் தங்கியிருந்தேன். என் கண்ணைக் கட்டி அந்த அழகிய பிரதேசத்துக்குள் அழைத்துப் போனார்கள். அதேமாதிரி கண்ணைக் கட்டி வெளியே கொண்டுவந்து விட்டார்கள். இரண்டு வருஷம் நான் அஜந்தா குகைகளில் இருந்தும் அந்த புத்த பிக்ஷுக்களிடமிருந்து வர்ண இரகசியத்தை அறிய முடியவில்லை. புத்த பிக்ஷுக்கள் அவ்வளவு பத்திரமாக அஜந்தா குகைகளையும், வர்ண இரகசியத்தையும் பாதுகாக்கிறார்கள். அப்படியிருக்க, இந்தப் பிள்ளையிடம் அதைச் சொல்லி அனுப்பும்படி வெகு சாதாரணமாக இந்த ஓலையில் எழுதியிருக்கிறது. அதிலும் விசித்திரம் என்னவென்றால், ஓலை என் பெயருக்கு எழுதியிருக்கிறது. எழுதியது, நமது பிக்ஷு எழுதியதாகவே தோன்றுகிறது. இதைப்பற்றி நீர் என்ன நினைக்கிறீர், மைத்ரேயரே!" என்று கூறி, புலிகேசிமன்னன் ஓலையை ஒற்றர் படைத் தலைவனிடம் நீட்டினான்.

மைத்ரேயன் ஓலையை வாங்கிக் கவனமாகப் படித்தான். பின்னர், சக்கரவர்த்தியைப் பார்த்து, "சத்யாச்ரயா! இதில் ஏதோ மர்மமான செய்தி இருப்பதாகத் தெரிகிறது. ஆனால் இன்னதென்று தெரியவில்லை. பையனை விசாரிக்கிறபடி விசாரித்தால் தெரிகிறது!" என்றான்.

"அதுதான், மைத்ரேயரே! பையனை எப்படி விசாரித்தாலும் அவன் சொல்கிறது நமக்கு விளங்கினால்தானே உபயோகம்? அவன் பேசுகிற மகர பாஷைதான் நமக்கு விளங்கவில்லையே? அதற்காகத்தான் வஜ்ரபாஹுவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்றான் புலிகேசி.

இப்படி அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே வஜ்ரபாஹு கூடாரத்துக்குள் நுழைந்தான். புலிகேசியின் அருகில் வந்து வணங்கி, "ராஜாதி ராஜா! மறுபடியும் ஏதாவது ஆக்ஞை உண்டா?" என்று கேட்டான்.

"வஜ்ரபாஹு! உம்மைப் போலவே இந்தப் பையனும் எனக்கு ஒரு ஓலை கொண்டு வந்திருக்கிறான். ஆனால், அதிலுள்ள விஷயம் மர்மமாயிருக்கிறது. ஓலையை யார் கொடுத்தார்கள், எங்கே யாரிடம் கொடுக்கச் சொன்னார்கள் என்பதையெல்லாம் விவரமாக விசாரித்துச் சொல்லும்! அதற்காகத்தான் உம்மை மீண்டும் தருவித்தேன்" என்றான்.

வஜ்ரபாஹு பரஞ்சோதியின் பக்கம் திரும்பி உற்றுப் பார்த்து, "ஆஹா! இந்தப் பையனா? இவனை நான் மூன்று நாள் இரவு மகேந்திர மண்டபத்தில் பார்த்தேனே? இவனைப் பார்த்ததுமே எனக்குச் சந்தேகம் உண்டாயிற்று. விசாரித்தேன். ஆனால் பையன் அழுக்கன்; மறுமொழியே சொல்லவில்லை!" என்றான்.

"இப்போது விசாரியும்; மறுமொழி சொல்லாவிட்டால், நாம் சொல்லச் செய்கிறோம்" என்றான் வாதாபி அரசன்.

"மன்னர் மன்னா! இவன் சுத்த வீரனாகக் காண்கிறான். இவனைப் பயமுறுத்தித் தகவல் ஒன்றும் அறிய முடியாது. நானே விசாரித்துப் பார்க்கிறேன்" என்று வஜ்ரபாஹு கூறிவிட்டு, பரஞ்சோதியை நோக்கி, "தம்பி! நான் அப்போதே சொன்னேனல்லவா? அதன்படி சத்யாச்ரயரிடம் உள்ளது உள்ளபடி சொல்லு. பயப்பட வேண்டாம். நான் உன்னைத் தப்புவிக்கிறேன்" என்றான்.

அதற்குப் பரஞ்சோதி, "ஐயா! எனக்குப் பயமே கிடையாது. எதற்காகப் பயப்பட வேண்டும்? உயிருக்கு மேலே நஷ்டமாகக் கூடியது ஒன்றுமில்லையல்லவா? இந்த ஓலையை நாகார்ஜுன பர்வதத்துக்குக் கொண்டு போய்ச் சத்யாச்ரயரிடம் கொடுக்கும்படி நாகநந்தி பிக்ஷு கூறினார். நீங்கள் சொல்கிறபடி இவருக்குத்தான் இந்த ஓலை என்றால், பெற்றுக்கொண்டு விடை எழுதிக் கொடுக்கட்டும். நான் எடுத்துக் கொண்டு திரும்புகிறேன். அல்லது இந்த ஓலை இவருக்கு அல்லவென்றால், ஓலையைத் திருப்பிக் கொடுக்

# சிவகாமியின் சபதம்

**கல்கி**

அத்தியாயம் 43

## மர்ம ஓலை

**வா**தாபி சளுக்க வம்சத்தின் பிரசித்தி பெற்ற சத்யாச்ரய புலிகேசி மன்னன் ஒல்லியாக உயர்ந்த ஆகிருதியும், வற்றி உலர்ந்து எலும்புகள் தெரிந்த தேகமும் உடையவனாயிருந்தான். அவனுடைய முகத் தோற்றமானது இரும்பையொத்த நெஞ்சத்தையும் தயை தாட்சண்யமில்லாத கடூர சுபாவத்தையும் பிரதிபலித்தது. கோவைப் பழம்போல் சிவந்து அனல் கக்கிய அவனுடைய கண்களைப் பார்க்கும்போது, கழுகின் கண்களைப் போன்ற தூரதிருஷ்டியுடைய கண்கள் அவை என்று தோன்றியது.

புலிகேசியின் முகத்தைப் பார்த்ததும் நமக்கு ஒரு கணம் திகைப்பு ஏற்படுகிறது. ஆ! இந்த முகத்தை இதற்கு முன்னால் எங்கேயாவது பார்த்திருக்கிறோமா, என்ன?—என்று வியப்புறுகிறோம். இல்லை, ஒரு நாளும் இல்லை. கம்பீரக் களையுடன் கடூரம் கலந்த இந்த முகத்தையும் அறிவொளியுடன் கோபக் கனலைக் கலந்து வீசும் இந்தக் கண்களையும் வேறெங்கேயும் பார்த்திருக்க முடியாது. இத்தகைய முகம் வேறு யாருக்காவது இருப்பதென்றால், அது யமதர்ம ராஜனாகத்தான் இருக்க வேண்டும்!—என்ற முடிவுக்கு வருகிறோம்.

புலிகேசியின் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தப்பட்ட பரஞ்சோதியும் அதே முடிவுக்குத்தான் வந்தான்.

**ப**ரஞ்சோதியைப் பிடித்துக் கொண்டு வந்த வீரர்களின் தலைவன் இராஜாதி ராஜனான சத்யாச்ரய புலிகேசிக்கு வணக்கம் செலுத்திவிட்டு, வடபெண்ணை நதிக் கரையிலுள்ள பௌத்த மடத் தலைவர் அவனைச் சக்கரவர்த்தியிடம் அழைத்துப் போகச் சொன்னதையும் வழியில் அவன் தப்பிக்க முயன்றதையும், அதன் மேல் அவனைக் கட்டிக் கொண்டு வந்ததையும் கூறினான்.

அவன் சொல்லி முடிப்பதற்குள்ளே புலிகேசி பொறுமை இழந்தவனாய், "அதெல்லாம் இருக்கட்டும்; இவன் யார்? எதற்காக இவனைக் கொண்டு வந்தீர்கள்?" என்று கோபக் குரலில் கர்ஜித்தான்.

"நேற்றிரவு இவன் புத்த விஹாரத்தில் தங்கியிருந்தான்......" என்று சொல்வதற்குள், "புத்த விஹாரத்தில் எத்தனையோ பேர் வந்து இராத் தங்குகிறார்கள் அவர்களையெல்லாம் என்னிடம் பிடித்துக்கொண்டு வர வேண்டுமா?" என்று புலிகேசி பேச்சிலேயே நெருப்பை உமிழ்ந்தான்.

வீரர் தலைவன் நடுங்கிய குரலில், "நாகநந்தி பிக்ஷுவிடமிருந்து இவன் ஓலை கொண்டு வந்திருப்பதாகச் சொன்னான். இதோ அந்த ஓலை!" என்று கூறி, பரஞ்சோதியிடமிருந்து வழியில் கைப்பற்றிய ஓலையைப் புலிகேசியிடம் கொண்டு வந்து சமர்ப்பித்தான்.

புலிகேசி ஓலையைப் பிரித்துக் கவனமாகப் படித்தான். அப்போது அவனுடைய முகத்தில் எல்லையற்ற வியப்புக்கும் குழப்பத்துக்கும் அறிகுறிகள் ஏற்பட்டன.

ஒரு தடவைக்கு இரண்டு தடவை படித்த பிறகும் தெளிவு ஏற்பட்டதாகத் தோன்றவில்லை.

அவன் ஓலையைப் படித்தபோது, அவனுக்கெதிரிலிருந்த படைத் தலைவர்கள் அவனுடைய முகத்தையே பார்த்த வண்ணமிருந்தனர்.

**ப**ரஞ்சோதியோ சொல்ல முடியாத குழப்பத்தில் ஆழ்ந்திருந்தான். அவன் நாகநந்தியின் ஓலையை எடுத்துக்

கொண்டு கிளம்பியபோது, இம்மாதிரி பகைவர்களிடம் சிறைப்பட்டு எதிரி அரசன் முன்னால் நிற்க நேரிடுமென்று நினைக்கவே இல்லை. அந்த எதிரியின் பாசறையில் வஜ்ரபாஹுவைக் கண்டதும், அவன் போகிற போக்கில் ''சத்யாச்ரய புலிகேசியிடம் உண்மையை உள்ளபடி சொல்லு!'' என்று கூறியதும் அவனுடைய மனக் குழப்பத்தை மிகவும் அதிகமாக்கின.

இன்னும் நாகநந்தி தன்னிடம் ஓலையைக் கொடுத்தபோது கூறிய வார்த்தைகள் நினைவு வந்தபோது அவன் தலையே கிறுகிறுக்கும் போல் ஆகிவிட்டது.

''இந்த ஓலையை நீ சத்யாச்ரயரிடமே கொடுக்க வேண்டும். வேறு யாரிடமும் கொடுக்கக் கூடாது. நாகார்ஜுன பர்வதத்திலுள்ள புத்த விஹாரத்தில் விசாரித்தால் அவர் இருக்குமிடம் சொல்வார்கள். சத்யாச்ரயரை ஒருவேளை நீ வழியிலேயே சந்தித்தாலும் சந்திக்கலாம். எப்போது எந்தக் கோலத்தில் அவர் இருப்பார் என்று சொல்ல முடியாது. அவரை எந்தக் கோலத்தில் பார்த்தாலும் நீ அதிசயப்படாதே!''—இவ்விதம் நாகநந்தி பிக்ஷு கூறியது அவனுக்கு நினைவு வந்தது. ''நாகநந்தி கூறிய சத்யாச்ரயர் இந்த வாதாபி சக்கரவர்த்தி புலிகேசிதானோ? அப்படியானால், நாம் கொண்டு வந்த ஓலையில் உள்ள விஷயம் அஜந்தா வர்ணச் சேர்க்கை சம்பந்தமானதுதானோ? அல்லது ஒரு பெரிய மர்மமான சூழ்ச்சியில் நாம் அகப்பட்டுக் கொண்டிருக்கிறோமா?'' என்று பரஞ்சோதி எண்ணியபோது, அவன் அறிவு குழம்பியது.

ஓலையிலேயே அமிழ்ந்து விட்டவனாகக் காணப்பட்ட புலிகேசி சட்டென்று தலையைத் தூக்கி, எதிரேயிருந்த படைத் தலைவர்களைப் பார்த்து, ''இந்த ஓலையில் என்ன எழுதியிருக்கிறது, தெரியுமா?'' என்று கேட்டான். உடனே, ''உங்களால் ஒரு நாளும் ஊகம் செய்ய முடியாது'' என்று தானே மறுமொழியும் கூறிவிட்டு, இடி இடியென்று சிரித்தான்.

இடி முழக்கம் நிற்பது போலவே, சட்டென்று சிரிப்பை நிறுத்திவிட்டு, காவலர்களுக்கு நடுவில் கட்டுண்டு நின்ற பரஞ்சோதியை உற்று நோக்கினான்.

புலிகேசியினுடைய கழுகுக் கண்களின் கூரிய பார்வையானது பரஞ்சோதியின் நெஞ்சையே ஊடுருவுவது போலிருந்தது.

புலிகேசி அவனைப் பார்த்துக் கடுமையான குரலில், ''பிள்ளாய்! உண்மையைச் சொல்! நீ யார்? எங்கு வந்தாய்? இந்த ஓலையைக் கொடுத்தது யார்? இதில் உள்ள விஷயம் இன்னதென்று உனக்குத் தெரியுமா?'' என்று சரமாரியாய்க் கேள்விகளைப் போட்டான். அந்தக் கேள்விகளில் ஒன்றையும் புரிந்துகொள்ள முடியாதவனாய்ப் பரஞ்சோதி மௌனம் சாதித்தவண்ணம் நின்றான்.

அதனால் புலிகேசியின் கோபம் கணத்துக்குக் கணம் பொங்கிப் பெருகிற்று. அதைப் பார்த்த படைத் தலைவர்களில் ஒருவன், ''பிள்ளையாண்டான் செவிடு போலிருக்கிறது!'' என்றான்.

இன்னொருவன், ''இல்லை, ஊமை!'' என்றான்.

மற்றொருவன், ''அதெல்லாம் இல்லை. பையனுக்கு நம்முடைய பாஷை புரியவில்லை! அதனால்தான் விழிக்கிறான்!'' என்றான்.

அப்போது புலிகேசி, ''ஆமாம், அப்படித்தான் இருக்க வேண்டும். ஜைன முனிவர்கள் கோபித்துக் கொண்டு போனதில் அதுதான் ஒரு சங்கடம். அவர்கள் இருந்தால் எந்த பாஷையாயிருந்தாலும் மொழிபெயர்த்துச் சொல்லிவிடுவார்கள். போகட்டும், அதனால் ஒன்றும் மோசமில்லை. இவனைக் கொண்டுபோய்ச் சிறைப்படுத்தி வையுங்கள்; பிறகு பார்த்துக் கொள்வோம்!'' என்று கூறியவன், திடீரென்று, ''வேண்டாம், இவன் இங்கேயே இருக்கட்டும். சற்று முன்பு வந்திருந்த வீரன் வஜ்ரபாஹுவை உடனே போய் அழைத்து வாருங்கள்!'' என்றான்.

வஜ்ரபாஹுவை அழைக்க ஆள் போனபிறகு, புலிகேசி, படைத் தலைவர்களைப் பார்த்துக் கூறினான்:—

# நீங்கள் எதை விரும்புவீர்கள்



அசௌகரியமான பிரயாணம் அல்லது



விறகு



துணிகள்



உணவு

இன்று ரயில்வேக்கு வேலை அதிகம். ஆகையால் பொது ஜனங்களுக்குத் தேவையான பொருள்களை கடைகளின்றி ஏற்றிவருவதுடன் எண்ணற்ற முன்னிருந்ததுபோல பிரயாணிகளுக்கு இட வசதியும் செய்துகொடுக்க முடியுமென்று உத்திரவாதம் அளிக்கமுடியாது. பொது ஜனங்களுக்கு இரண்டில் ஏதாவது ஒன்றுதான் கிடைக்கும். இரண்டும் கிடைக்காது. நியாயமாகப் பார்க்கப்போனால் பிரயாணிகளின் சௌகரியத்தைவிட பொது ஜனங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்கள், துணிமணிகள் விறகு மற்ற சாமான்கள் கொண்டு வருவதுதான் முக்கியமானது. போதுமான உணவுப் பொருள்கள் கிடைக்காத இடங்களில் நீங்கள் இருந்திருந்தால், உங்களுக்குப் பசி போயிருக்கும்? மக்களுக்குத் தேவையான ஆயிரக் கணக்கான மணங்கு உணவுப் பொருள்களைக் கொண்டு வரும் ரயில் வண்டிகளின் அருமை புலப்படும்.

ஆமாம், பொதுஜனங்களின் பிரயாணம் அவ்வளவு முக்கியமானதல்ல. ஆகையால்தான் பிரயாண வண்டிகள் குறைந்து உணவுப் பொருள்களேற்றிவரும் வண்டி அதிகரித்திருக்கின்றன. அதுவே பிரயாண வண்டிகளுக்கேற்பட்டிருக்கும் நெருக்கடிக்குக் காரணம். ஆகையால்தான் மிக முக்கியமான வேலைகளைச் செய்ய ரயில்வேக்களுக்கு நீங்கள் உதவி செய்ய விரும்பினால், நீங்கள் வீட்டிலேயே தங்கவேண்டும்.



## பிரயாணத்தைக் குறையுங்கள்.

CAAA 62—IM

வீட்டு வாடகையை உயர்த்திக் கொண்டே போய்விட்டார்கள்; இன்னும் உயர்த்திக் கொண்டிருக்கிறார்கள்.

திடீர், திடீர் என்று வீட்டுக்காரர்களுக்குத் தங்கள் வீட்டின்மீது மோகம் விழுந்து விடுகிறது. இருந்தாப்போலிருந்து "எங்கள் வீட்டிற்கு நாங்கள் குடிவரப் போகிறோம். ஆகையால் தாங்கள் இன்னும் ஒரு மாத காலத்துக்குள் வீட்டைக் காலி பண்ணிக் கொடுக்கவேண்டும்" என்று வீட்டுக்காரர் நோட்டீஸ் கொடுக்கிறார்.

சில அசடுகள், உண்மையிலேயே வீட்டுக்காரருக்கு வீடு தேவையாய் இருக்கிறது என்று நினைத்துக் கொண்டு வீட்டைக் காலி பண்ணிவிட்டு இப்பொழுது நடுச்சந்தியில் நிற்கிறார்கள்.

"வாடகையை உயர்த்தப் போகிறோம்" என்னும் விஷயத்தைத் தான் வீட்டுக்காரர்கள் அத்தனை தந்திரமாகத் தெரிவித்திருக்கிறார்கள் என்பது சிலருக்குத்தான் தெரிகிறது. திடீரென்று வாடகையை உயர்த்தினால் சர்க்கார் ஆக்ஷேபிப்பார்கள் என்று இந்த தந்திரத்தைக் கையாள ஆரம்பித்திருக்கிறார்கள் சிலர்.

என் வீட்டுக்காரர் சென்ற ஒரு வருஷ காலத்துக்குள் எட்டுத் தடவை தாம் "குடிவர உத்தேசித்தார்" என்றால் எத்தனை தடவை வாடகையை உயர்த்தியிருப்பார் என்று நீங்களே எண்ணிப் பாருங்களேன்!

வீட்டு வாடகை விஷயம்தான் இப்படி என்றால் பால்காரன் விஷயம் கேட்கவே வேண்டியதில்லை. தான் எத்தனைக்கெத்தனை தண்ணீர் அதிகமாக ஊற்ற ஆரம்பித்திருக்கிறானோ, அத்தனைக்கத்தனை விலையையும் உயர்த்த ஆரம்பித்து விட்டான்.

கறிகாய்கள் விஷயமோ, வீசை எத்தனை அணா என்று கேட்ட இடத்தில் எத்தனை ரூபாய் என்று கேட்க வேண்டியிருக்கிறது.

இப்படி எல்லா சாமான்களின் விலையும் நான்கு மடங்கும், ஐந்து மடங்கும், பத்து மடங்குமாக உயர்ந்திருக்கையில், சம்பளம் மட்டும் எங்கேயும் இரண்டு மடங்குக்கு மேல் உயர்ந்ததாகத் தெரியவில்லை. ஆகவே வழக்கம்போல் கடன் வாங்கத்தான் வேண்டியிருக்கிறது. சாமான்களின் விலை ஏகத் தாராக உயர்ந்திருப்பதால் கடன் வாங்கியும் பட்டினி கிடக்க வேண்டியிருக்கிறது.

அப்படியாவது தைரியமாக முதலாளிகளைப் பார்த்து, "சாமான் பண்டங்களின் விலை ஐந்து மடங்காக உயர்ந்து விட்டதே. சம்பளத்தையும் ஐந்து மடங்காக உயர்த்துங்கள்" என்று கேட்க முடிகிறதா? கிடையாது. அத்தனைக்கும் சரக தினம் என்னோடு சண்டை போட்டுக் கொண்டுதான் இருக்கிறாள். "இப்படி கடன் வாங்கிக் கொண்டே போனால் குடித்தனம் எப்படி நடக்கிறது என்று நினைக்கிறீர்கள்? ஒன்றுமில்லாததற்கெல்லாம் என்னோடு கச்சை கட்டிக்கொண்டு சண்டைக்கு வந்து விடுகிறீர்களே! சாமான் பண்டங்கள் எத்தனை மடங்கு உயர்ந்திருக்கிறதோ அத்தனை மடங்கு சம்பளத்தையும் உயர்த்தத்தான் வேண்டும் என்று உங்கள் காரியாலய முதலாளியோடு சண்டை போடுவதற்கு என்ன?" என்று கேட்கிறாள்.

சரக இப்படிக் கேட்கும்போதெல்லாம் எனக்கு வெட்கமாய் இருக்கிறது. நானும் எத்தனையோ தடவைகள் முதலாளியோடு சண்டை போடவேண்டும் என்றுதான் பார்த்தேன். என்னமோ தைரியம் வரவில்லை.

முன்னெல்லாம் ரூபாய் ஒன்றும், இரண்டும்,ஐந்தும்,பத்துமாகவே சம்பள உயர்வு, கொடுத்து முதலாளிகள் நம்மைப் பழக்கி விட்ட படியால், இப்பொழுது சம்பளத்தை இரண்டு மடங்கு ஆக்கியிருக்கிறதே ஒரு பெரிய காரியம் போல் தோன்றுகிறது. மேற்கொண்டு சம்பள உயர்வு கேட்க யோசனையாய் இருக்கிறது. தைரியம் வரவில்லை.

ஆகக்கூடி இந்த யுத்தம் வரப்போக எல்லாருக்குமே, அதாவது சம்பளம் வாங்கிப் பிழைக்கும் எல்லாருக்குமே ஒரு பெரிய தர்ம சங்கடம் ஏற்பட்டு விட்டது. காரியாலயத்திலோ மேற்கொண்டு சம்பள உயர்வு கேட்பதற்கு யோசனையாய் இருக்கிறது. கேட்டாலும் இப்பொழுதானே சம்பளத்தை உயர்த்தினோம் என்கிறார்கள். ஆனால் சம்பளமோ நம் செலவுக்குத் துளிகூடப் போதவில்லை. பழைய சம்பளம் பற்றின அளவுகூடப் பற்றவில்லை.

இந்த நிலைமையில் "யுத்தம் எப்பொழுது முடியும்!" என்று கேட்கத் தோன்றுமா, தோன்றாதா, நீங்களே சொல்லுங்கள்!



# பட்டினி

கிறேன். வரவுக்கு மிஞ்சிதான் வீட்டில் செலவு ஆகிக்கொண்டு வருகிறது.

இருந்தும் அதற்காக நான் இதுவரை மானம் இழந்து போனதாகவோ, மதி கெட்டுப் போனதாகவோ தெரியவில்லை. கிட்டத் தட்ட எல்லாருமே இப்படி ஆனை முதலில் அதிகம் செலவழித்துக் கொண்டிருக்கும்போது, மானத்தை எப்படி இழக்க முடியும்? மதி எப்படிக் கெட முடியும்? சம்பத்தியும் சம்பாத்தியும் சத்திரத்தில் சந்தித்தால் பேச்சேது, ஏச்சேது?

என்ன கேட்கிறீர்கள்? ... எப்படி குடித்தனம் பண்ணினேன் என்று தானே கேட்கிறீர்கள்? எல்லாம் கடன் வாங்கித்தான்.

முன்னெல்லாம் கடன் வாங்குவதைப் பற்றி நான் கவலைப்பட்டதே கிடையாது. நான் என்ன, யாருமே கவலைப் பட்டது கிடையாது. ஏனெனில், கடன் வாங்கினால் பட்டினி கிடக்காமல் குஷியாக இருக்க முடிந்தது.

யுத்தத்துக்கு முன்பு கிட்டத்தட்ட எல்லாருக்கும் சொல்ப சம்பளம்தான் கிடைத்து வந்தது. ஆகவே கடன் வாங்குவதைப் பற்றி யாருமே கவலைப் பட்டதாகத் தெரியவில்லை.

கடன் வாங்கும் போதெல்லாம் காரியாலய முதலாளியை நிந்தித்துக் கொண்டே கடன் வாங்குவோம். "இப்படி நாயாய் உழைக்கிறோம். நமக்குச் சரியாகச் சம்பளம் தருகிறானா பார்" என்று முதலாளியை வைதுகொண்டே கடன் வாங்குவோம். முதலாளியை வைவதற்கு இப்படியாவது ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைக்கிறதே என்று அதற்காகவே கடன் வாங்கினவர்களும் உண்டு.

ஆனால் யுத்தம் வந்தாலும் வந்தது, நாம் எல்லார் பாடும் இருதலைக்கொள்ளி எறும்புபோல் ஆகிவிட்டது.

திடீரென்று எல்லாருக்கும் சம்பளம் உயர்ந்தது. ஒன்றுக்கு இரண்டு பங்கு கூட உயர்ந்தது. சம்பளத்துடன் கூட யுத்தப்படி கிடைத்தது. அதுவும் உயர்ந்தது.

ஆனால் சம்பளம் என்ன உயர்ந்தும் வழக்கம் போல் கடன் வாங்கத்தான் வேண்டியிருக்கிறது. ஆனால் முன்னைப் போல் குஷியாக இருக்க முடிகிறதா? கிடையாது. 'கடன் வாங்கியும் பட்டினி' என்று சொல்வார்களே, அந்த நிலைமைதான் நிலவி வருகிறது.

யுத்த நிலைமையைக் கருதி, சிப்பந்திகளின் சம்பளத்தை இரட்டிக்கலாமா என்று முதலாளி யோசித்து, யோசித்து, யோசித்து, கடைசியாக ஒரு முடிவுக்கு வருவதற்குள் சாமான்களின் விலை கிடு, கிடு என்று உயர்ந்துவிட்டது.

நாம் குடியிருக்கும் வீடுகளின் சொந்தக்காரர்கள், மெள்ள, மெள்ள,

# யுத்தம் எப்பொழுது முடியும்!

நாடோடி

## கடன் வாங்கியும்

"கடன் வாங்கியும் பட்டினி" என்று ஒரு பழமொழி நம் நாட்டில் வெகு காலமாக வழங்கி வருகிறது. ஆனால் இதுவரையில், அதாவது இந்த யுத்தம் ஆரம்பிக்கும் வரையில் கடன் வாங்கினவர்கள் யாரும் பட்டினி கிடந்து நான் பார்த்ததில்லை. ஊரான் பணம் கையில் இருக்கும் போது அதைச் செலவழித்துக்கொண்டு குஷியாக இருக்காமல் பட்டினி கிடக்க அவர்களுக்குப் பைத்தியமா, என்ன?

கடன் கொடுத்தவன் பட்டினி கிடப்பதைத்தான் நான் பார்த்திருக்கிறேன். "ஐயோ, கையில் இருக்கும் பணத்தையெல்லாம் கடனாகக் கொடுத்துவிட்டோமே! கடன் வாங்கினவன் திருப்பிக் கொடுக்கும் வழியாய்க் காணோமே! வேறு யாரிடமாவது கடன் வாங்குவோம் என்றால், கடன் கொடுத்து கடன் கொடுத்து, கடன் கொடுக்கத் தெரிகிறதே யொழிய, கடன் வாங்கத் தெரியவில்லையே! கடன் வாங்குவதே ஒரு தனிக் கலை போலிருக்கிறதே!" என்று கடன் கொடுத்தவர்கள் அனலிடைப்பட்ட புழுப்போல் தவிப்பதைத்தான் நான் பார்த்திருக்கிறேன்.

ஆனால் இந்த யுத்தம் வந்தாலும் வந்தது, ஜனங்கள் கடன் வாங்கியும் பட்டினி கிடக்க ஆரம்பித்து விட்டார்கள். சம்பளம் உயர்ந்தும் போதவில்லை என்று தவிக்க ஆரம்பித்து விட்டார்கள்.

"வரவுக்கு மிஞ்சி செலவு செய்யாதே. உன் சம்பளத்துக்குள்ளேயே உன் குடித்தனத்தை நடத்து" என்று எனக்கு வரவும், சம்பளமும், குடித்தனமும் ஏற்படாத பள்ளிக்கூடத்து நாட்களிலிருந்தே உபதேசம்!

எங்கே இந்த உபதேசத்தை நான் மறந்துவிடப் போகிறேனோ என்று இதற்கென்றே கீழ்க்கண்ட பாட்டை என்னை நெட்டுருப் பண்ணி ஒப்பிக்கும்படி என் வாத்தியார் என்னை எத்தனையோ தடவை பிரம்பால் அடித்திருக்கிறார். எத்தனையோ தடவை பெஞ்சி மீது நிறுத்தி வைத்திருக்கிறார். எத்தனையோ தடவை 'இம்போஸிஷன்' எழுதும்படி பயமுறுத்தியிருக்கிறார்.

ஆனமுதலில் அதிகஞ் செலவானால்
மானமழிந்து மதிகெட்டுப்—போன
திசை
எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்
பிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லானாம் நாடு.

என்ற அந்தப் பாட்டு எனக்கு இன்னும் ஞாபகம் இருக்கிறது.

ஆனால் என்ன ஞாபகம் இருந்து என்ன பயன்? நான் சம்பாதிக்க ஆரம்பித்ததிலிருந்து ஆன முதலில் அதிகம் தான் செலவழித்துக் கொண்டு வரு

# வட்டமேஜை

மயிலாப்பூர்
24—5—44

ஐயா, சென்ற மே மாதம் 20-ந் தேதி கல்கியில் வந்துள்ள "சிவகாமியின் சபதம்"தைப் படித்தேன். அதில் ஓரிடத்தில் வஜ்ரபாகு கலிங்கத்துப் பரணியைப் பற்றிக் கூறுகிறார். இக்கதை பல்லவ அரசராகிய மகேந்திர வர்மன் காலத்தில் நடந்தது. மகேந்திரர் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதி. (600-625). ஆனால் கலிங்கத்துப் பரணியோ முதலாம் குலோத்துங்கன் கலிங்கத்தை செயித்த பொழுது செயங்கொண்டாரால் இயற்றப் பட்டது. குலோத்துங்கனின் காலம் கி. பி. பன்னிரெண்டாம் நூற்றாண்டு. (1070–1118) ஆகவே வஜ்ரபாகு தனக்கு 400 வருடங்களுக்குப் பிறகு வரப்போகும் ஒரு நூலைப் பற்றிக் கூற முடியாது. இது ஒரு கற்பனைக் கதையே யானாலும், சரித்திர ஆதாரங்களைக் கொண்டு எழுதப் படுவதால் இதைப் போன்ற தவறுகள் நேரக்கூடாது.

ரெ. ராசகோபாலன்.

[தங்களுடைய சரித்திரப் பற்றைப் பாராட்டுகிறேன். ஆனால் வஜ்ரபாகு 'கலிங்கத்துப் பரணி'யைப் பற்றிக் கூறவில்லை; 'பரணி'யைப் பற்றித்தான் சொல்கிறார். 'கலிங்கத்துப் பரணி' பிற்காலத்து நூல்; ஆனால் 'பரணி' என்பது தமிழ் நாட்டில் பூர்வமாக உள்ள நூல் வகைகளில் ஒன்று.

—ஆசிரியர்.]

மாயவரம்
18—6—44

சென்ற 1944ம் ஜூன் மீ 4௳ யன்று தன்னிலம் தாலூகா திருப்புகலூரில் ஸ்ரீ அக்னிபுரீஸ்வர ஸ்வாமிக்கு அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் மிகுந்த சிறப்புடன் நடைபெற்றது. அதை அனுசரித்து ஜூன் மீ 1௳ முதல் 3௳ வரையில் சங்கீதக் கச்சேரிகள் சங்கீத ரத்னாகரம் அரியக்குடி ராமானுஜஅய்யங்கார், மதுரை மணி அய்யர், கலியாணசோழபுரம் சங்கீத பூஷணம் துரைசாமிப் பிள்ளை முதலியவர்களால் தக்க பக்கவாத்தியங்களுடன் நடைபெற்றன. அச்சமயம் சங்கீத ரத்னாகர அரியக்குடி ராமானுஜ அய்யங்கார் அவர்களுடன் நான் பேசச் சந்தர்ப்பம் கிடைத்தது. அவர்கள் தமிழ் இசை வளர்ச்சியில் பங்கெடுத்துக் கொள்ளாமல் வாளாயிருப்பதைப் பற்றிச் சங்கீதப் பற்றுள்ளவர்கள் வருத்தப்படுவதை அவர்களிடம் தெரிவித்தேன். அதற்கு அவர்கள் தாம் தமிழ் இசை வளர்ச்சியில் முன்னணியில் நிற்பவரென்றும், ஆனால் சங்கீதக் கச்சேரிகளில், நூற்றுக்கு நூறு - அதாவது வர்ணம் முதல் மங்களம் வரையில் தமிழையே பாட வேண்டுமென்ற கோட்பாடுள்ளவர்களுடன் தாம் சேருவது இயலாது என்றும், முதலில் பாடும் வர்ணம் முடிவில் பாடும் மங்களம் இவைகளைத் தவிர பாக்கி கீர்த்தனம் முதலியவைகளைத் தமிழிலே பாடத் தாம் ஒப்புக் கொள்ளுவதாகவும் சொன்னார்கள். முக்கியமாக சங்கீத வித்வான்கள் தங்கள் தாய் மொழி இசையைத்தான் ஆதரிக்க வேண்டுமென்று வற்புறுத்திச் சொன்னார்கள். அதை மெய்ப்பிக்க 2—6—44-ல் நடந்த சங்கீதக் கச்சேரியில் வர்ணம், மங்களம் இவைகளைத் தவிர ஒன்றிரண்டுதான் மற்ற மொழியில் பாடினார்கள். மற்றவையெல்லாம் தேன் கலந்த தமிழ்க் கீதங்களே. தாம் ஸ்வரப் படுத்திய அருணாசலக் கவியின் பாட்டுகளையே முக்கியமாய்ப் பாடினார்கள். "வந்தான் வந்தான், பரதா" என்ற மோஹன ராகக் கீர்த்தனம் பாடியபொழுது சபையோர்கள் எல்லோரும் ஆனந்தக்கண்ணீர் விட்டார்கள். அன்றையதினம் நடந்த கச்சேரியைப்போல் நாம் இதுவரை கேட்டதில்லை என்று எல்லோரும் ஒரு வாய் மொழியாய்ச் சொன்னார்கள். அதற்குக் காரணம் அரியக்குடி அவர்களின் சங்கீத ஞானமா அல்லது அன்று அவர்கள் பாடிய தமிழ்க் கீதங்களா அல்லது இரண்டையும் கலந்ததினாலா என்று அனைவரும் வியந்து கொண்டிருந்தார்கள்.

பா. திருஞானம் பிள்ளை,
வக்கீல்.

[அரியக்குடி இராமானுஜய்யங்கார் அவர்கள் தனித்த முறையில் தமிழிசைக்குச் செய்யும் தொண்டைப் பெரிதும் பாராட்டுகிறேன்; தமிழர்களும் பாராட்டுவார்கள்.

—ஆசிரியர்.]

பாண்டிச்சேரி
24—6—44

நாங்கள் ஸ்வாமி ருத்ரானந்தரின் சேவையை (பீஜித் தீவில்) விவரித்தும் அவருடைய திருவுருவத்தைச் சென்ற கல்கி இதழின் அட்டையில் அலங்கரித்ததும் மிக்க மகிழ்ச்சி அளிக்கிறது.

ஸ்வாமி ருத்ரானந்தருடனேயே, இராமகிருஷ்ண மடத்தாரால், ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் சிறந்த பக்தரான ஸ்ரீமான் ராமகிருஷ்ணய்யர் (தஞ்சை) பீஜித் தீவுக்கு அங்குள்ள இந்தியரின் தமிழ் வளர்ச்சிக்காகவும், கல்வி அபிவிருத்திக்காகவும் அனுப்பப் பட்டார். இவருக்குப் பெரிய குடும்ப பாரம் இருந்தும் சேவையையே மேலாகக் கருதி ஸ்வாமிகளுடனேயே சென்றிருக்கிறார். அங்கும் மெச்சத் தகுந்த சேவைகள் செய்து வருகிறார். பீஜியிலுள்ள ஒவ்வொரு இந்தியரும் அவருக்கு அறிமுகமானவர்கள்.

ந. ராஜகோபாலன்.

[தங்கள் கடிதம்மூலம் தமிழ் நாட்டிலுள்ள தமிழர்களுக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ணய்யர் அறிமுகமாகி விட்டார். சந்தோஷம்!

—ஆசிரியர்.]

மாயவரம் ஹெட்மாஸ்டரைப் பெரு
மைப் படுத்துவதற்காக ஆயிரக்
மைல் பிரயாணம் செய்த ஆசிரியர்
ராஜா கிருஷ்ணன் பேசுகிறார்.

வருகிறார்
புது ஹெட்மாஸ்டர்!
பராக்! பராக்!



மாயவரத்தின் மணி
யும் 'பாரதமணி'
யின் ஆசிரியரு
மான ஸ்ரீ கே. எஸ்.
வெங்கடராமணி.




மாயவரத்தின் 'மேயர்'
ஸ்ரீ கனகசபை செட்டி
யார். ஹெட்மாஸ்டரின்
உபசாரத்தில் மிக்க
பெருமை கொண்டார்.



ஒழுக்கமும், அரிய பொறுமையும் எங்களுக்கு வழி காட்டி மேம்பாட்டை அளிக்கின்றன......" என்று கூறியிருந்தார்கள்.

வாழ்த்துச் செய்திகள் பின்னர் வாசிக்கப்பட்டன. "ஸ்ரீ ராகவ ஐயங்கார் அவர்கள் தமது அந்தரங்க சக்தியால், தம் நண்பர்களின் உள்ளத்தில் அழியாத இடம் பெற்றுவிட்டார்" என்று தலைவர் ராஜாஜி தமது வாழ்த்துச் செய்தியில் கூறியிருந்தார்.

மாயவரத்தின் மணியும், "பாரதமணி"யின் ஆசிரியருமான கே. என். வேங்கடரமணி அடுத்தாற்போல் பேசினார். பாரத நாட்டின் பதினெட்டு வைஸ் சான்ஸலர்களுக்கே ஸர் எஸ். ராதாகிருஷ்ணனே தலை சிறந்தவர் என்று குறிப்பிட்டார். ஸ்ரீ ராகவ ஐயங்காரை உத்தமர் என்றும், சலியாத உழைப்பாளி என்றும், தேசபக்தர் என்றும் வர்ணித்து விட்டு, அவர் மிகவும் கண்டிப்புக்காரர் என்பதைச் சொல்லும்போது, ஐயங்கார் தமது முகத்தைக் கொஞ்சம் கண்டிப்பாகவே வைத்துக் கொண்டார்.



ஆசிரியர் ராதாகிருஷ்ணனைக் கைப்பிடியாகக் கொண்டு வந்து சேர்த்த வக்கீல் ஸ்ரீ சுப்பராயர்.

"ஸ்ரீ கே. பாலசுப்ரமணிய ஐயரின் பேச்சைக் கேட்கும்போதெல்லாம் திரும்பி எனக்கு யௌவனம் வந்து கொண்டிருப்பதை உணருகிறேன்" என்று கே. என். வேங்கடரமணி முன்கூட்டியே எச்சரித்திருந்த படியால், ஸ்ரீ பாலசுப்ரமண்ய ஐயர் பேசும்போது ஒரு கண் அவர் மீதும், இன்னொன்று என் தேகத்தின் மீதும் இருந்தன. காயகல்ப சிகிச்சை செய்து கொள்ளும் அவசியம் இல்லாமல் யௌவனம் வந்தால் யார் வேண்டாம் என்பார்கள்?

ஸ்ரீ வி. ராகவ ஐயங்கார் பின்னர் பேச எழுந்திருந்தார். வெண்கல நாதம் போன்ற கணீரென்ற குரலில் ஸ்ரீ வி. ராகவ ஐயங்கார் தமது நன்றியைத் தெரிவித்துக் கொண்டார். "இந்த ஏழை உபாத்தியாயரை இப்படித் திடீரென்று பிரசித்தப்படுத்திச் சங்கடமான நிலையில் வைத்துவிட்டீர்களே" என்று முறையிட்டார்.

இந்த வருஷத்தில் மாயவரம் பள்ளிக்கூடத்திலிருந்து எஸ்.எஸ்.எல்.ஸி. பரீட்சைக்குப் போன 118 பேரில் 116 பேர் பாஸ் செய்து விட்டதாக அறிகிறேன். இப்படியெல்லாம் வேலை செய்துவிட்டு, "என்னைப் பிரசித்தப்படுத்தி விட்டீர்களே?" என்று முறையிட்டால் என்ன பிரயோஜனம்?

பிறகு, ஸ்ரீ ராகவய்யங்கார், புது ஹெட் மாஸ்டராகப் போகும் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணமூர்த்தி ஐயரை அறிமுகப்படுத்தி, அவர் தலைமையில் பள்ளிக்கூடம் மேலும் சிறந்தோங்குமென்று நம்புவதாகக் கூறினார்.

ஸபையைத் தூக்கிக் கரகோஷம்கூடச் செய்ய முடியாமல் சபையோர்கள் மெய் மறந்து உட்கார்ந்திருந்தார்கள் என்றால், ஸர் எஸ். ராதாகிருஷ்ணனின் பிரசங்கம் எவ்வளவு சுவாரஸ்யமாயிருந்திருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை.

"நமது ஐயங்கார் அவர்களின் வாழ்க்கையில் இதுதான் முக்கியமான நாள். தன் சேவையை ஒருவர் பாராட்டுகிறார் என்பதை அறியும்போது ஒருவருக்கு உண்டாகும் உணர்ச்சி எப்படிப்பட்டது? வாத்தியார் வேலையைப்போல் தொல்லை பிடித்த வேலை உலகில் வேறு ஒன்றும் கிடையாது. அதனால்தான், 'கடவுள் யாரை வெறுக்கிறாரோ, அவரைப் பள்ளிக்கூட உபாத்தியாயராக்கி விடுகிறார்' என்ற பழமொழி கூட இருக்கிறது. அந்த வேலை பார்த்து நல்ல பெயர் வாங்குவது லகுவான காரியம் அல்ல" என்றார் ஸர் ராதாகிருஷ்ணன்.

இவ்விழா இவ்வளவு வெற்றிகரமாக நடந்த சந்தோஷத்தில் ஆசிரியர் ராதாகிருஷ்ணனை ரயில் ஏற்றவும் மறந்து விடுவார்களோ என்று பார்த்தேன். நல்லவேளையாக முண்டி முண்டி போட்மெயிலில் இடம் பிடித்து அவரை ஏற்றி விட்டார்கள். கொண்டாட்டத்துக்கு வந்திருந்த மற்றவர்கள் ரயிலேறத் திண்டாடியதும் ஒரு ரஸமான காட்சியாய்த்தானிருந்தது. எல்லாம் மாயவரத்தின் மகிமைதான்!

# மாயவரத்தில் நடந்தது

[ நமது நிருபர் ]

காசி எங்கே இருக்கிறது? மாயவரம் எங்கே இருக்கிறது? இந்த நாளில் காசியிலிருந்து மாயவரத்துக்குப் பிரயாணம் செய்வதென்றால் இலேசான காரியமா?

ஆனாலும், அந்த அரிய காரியத்தைக் காசி சர்வகலாசாலை வைஸ் சான்ஸலரும் இந்தியாவின் பிரசித்தி பெற்ற தத்துவ சாஸ்திரியுமான ஆசிரியர் ராதாகிருஷ்ணன் செய்து முடித்தார்.

அப்படி அவர் மாயவரம் வந்து சேர்ந்தது மாயவரத்தின் அதிர்ஷ்டமா அல்லது அவருடைய அதிர்ஷ்டமா என்று கேட்டால், நிச்சயமாக ஆசிரியர் ராதா கிருஷ்ணனின் அதிர்ஷ்டந்தான் என்பதை அவருக்கு மாயவர வாசிகள் ஜூன் மீ 25உ அளித்த உபசாரப் பத்திரத்தில் குறிப்பாகச் சொல்லியிருந்தார்கள்.

உண்மைதான்! மாயவரத்துக்கு அக்கம் பக்கத்திலே திருஞான சம்பந்தர், கம்ப நாட்டாழ்வார், பட்டினத்துப் பிள்ளையார் முதலிய மகான்கள் அந்த நாளிலும் ஸ்ரீ கே. எஸ். வெங்கடரமணி முதலியவர்கள் இந்த நாளிலும் அவதரித்தார்கள். இதையெல்லாம் விட, மாயவரத்திலேதான் இருபத்தைந்து வருஷம் ஹெட்மாஸ்டர் வேலை பார்த்து விலகிக் கொள்ளும் ஸ்ரீ வி. ராகவய்யங்கார் அவர்களுக்கு அவ்வளவு சிறப்பாகவும் உற்சாகமாகவும் பிரிவுபசாரம் நடத்தினார்கள். ஆயிரம் ஆனாலும் மாயவரம் ஆகாது என்பதில் ஆட்சேபனை என்ன?

ஸ்ரீ ராகவ ஐயங்கார் அவர்களைப் பாராட்டுவதற்கு மாயவரம் வாசிகள் எவ்வளவு துடித்துக் கொண்டிருந்தார்கள் என்பது அவர்கள் பொதுக் கூட்டத்தை நாலு மணிக்கே ஏற்பாடு செய்ததிலிருந்து தெரிய வந்தது.

மேற்படி விழாவை நடத்தும் உற்சாகத்தில் அவர்கள் கடவுளைக்கூட மறந்து விட்டார்கள் என்றால், வேறு என்ன சொல்லவேண்டும்? உபசாரக் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ ராஜா ராமையர் 'என்ன காரியத்திற்காகக் கூடியிருக்கிறோம்' என்பதைச் சொல்லிய பிறகுதான் திடீரென்று கடவுள் ஞாபகம் வந்தது. பிறகு, சமஸ்கிருதத்திலும், ஆங்கிலத்திலும், தமிழிலுமாகக் கடவுள் வாழ்த்து நடந்தது.

ஆர்வத்திலும் உற்சாகத்திலும் நகர வாசிகள் எவ்வளவு மெய் மறந்திருந்தார்கள் என்பதற்கு மற்றொரு உதாரணம் உடனே கிடைத்தது. உபசாரக் கமிட்டிக் காரியதரிசி டாக்டர் விசுவநாதன் ஹெட்மாஸ்டருக்குப் பிரிவு உபசாரப் பத்திரத்தை வாசித்துக் கொடுத்தார். ஆனால் பத்திரத்தைப் படித்துக் கொடுத்துவிட்டு, மாலையைக் கூட்டத்துக்கு அக்கிராசனம் வகித்த ஸர் ராதாகிருஷ்ணன் கழுத்தில் போடப் போனார். ஆனால் ராதாகிருஷ்ணன் அதைத் தடுத்துப் போடவேண்டிய இடத்தில் அதைப் போடச் செய்தார்!

டாக்டர் விசுவநாதனாவது இந்த மட்டோடு விட்டார். இந்த வைபவத்தின் மற்றொரு காரண புருஷரான ஸ்ரீ எ. வி. வெங்கடராமனிடம் விட்டிருந்தால், உணர்ச்சி மிகுதியால் மாலையை என்ன செய்திருப்பாரோ?

மாயவரம் நகர சபையின் தலைவர் ஸ்ரீ வி. கனகசபைச் செட்டியார் ஹெட்மாஸ்டரைப் பாராட்டிச் சுருக்கமாகப் பேசினார். ஆனால், அவர் ஹெட்மாஸ்டருக்குக் கொடுக்கவேண்டிய வெள்ளிக் 'கேடய'த்தை அவரிடம் கொடுக்காமல், ஏற்கெனவே ஸர் ராதாகிருஷ்ணனுக்குக் கொடுத்திருந்த வெள்ளிக் குழாயை எடுத்துக் கொடுக்கப் போனது சபையில் மிக்க கலகலப்பை உண்டாக்கிற்று.

பள்ளிக்கூடத்திலிருந்து விலகும் மாணவர்களுக்கு ஹெட்மாஸ்டர் நற்சாட்சிப் பத்திரம் கொடுப்பது உண்டல்லவா? அதற்குப் பழிக்குப் பழி வாங்க இப்பொழுது வேலையிலிருந்து விலகும் ஹெட்மாஸ்டருக்கு மாணவர்கள் நற்சாட்சிப் பத்திரம் கொடுத்திருந்தார்கள்!

"உயர்ந்த குணசீல!" என்று அவரை விளித்து, "உங்கள் எளிய நடையும் தூய

"அதைப் பற்றி என்ன சந்தேகம்?" என்று கேட்டார் வாலஸ்.

"என்ன சந்தேகமா? எல்லாமே சந்தேகந்தான். இந்த யுத்தத்திற்குப் பிறகு ஆசிய நாடுகளுக்கும் சுதந்திரம் கிடைக்குமென்று ஆசியாக்காரர் ஒருவருமே நம்பவில்லை. அவர்கள் நம்பும்படி செய்ய ஏதாவது பண்ண வேண்டும்!" என்றார் சியாங்.

"அடாடா! இது என்ன அவநம்பிக்கை கொண்ட உலகம்!" என்று பெருமூச்சு விட்டார் வாலஸ்.

உடனே, ஆசிய நாடுகளின் வருங்காலத்தைப் பற்றி இருவரும் ஆழ்ந்து யோசித்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். அந்த முடிவை ஒரு அழகான வாக்கியத்தில் அமைத்தார்கள்.

ஆகா! அந்த வாக்கியத்தின் அமைப்பைத்தான் என்னவென்று சொல்வது?

இந்திய அதிகார வர்க்கத்தைச் சேர்ந்த கொட்டை போட்ட அதிகாரி ஒருவர் டில்லி ஸெக்ரடேரியட்டிலிருந்து நேரே குங்கிங்குக்குப் போய்த் தயாரித்துக் கொடுத்த வாக்கியமாகவே தோன்றுகிறது என்றால், வேறு சொல்வானேன்?

அவ்வளவு சமயோசித அர்த்த புஷ்டியும், அவ்வளவு சந்தேகங்களும், அவ்வளவு வழ வழ குழ குழாவும், அவ்வளவு சுற்றி வளைத்து மூக்கைத் தொடுவதும் அந்த ஒரு வாக்கியத்திலே அடங்கியிருக்கிறது. கேளுங்கள் :—

"பராதீனப் பட்டிருக்கும் ஆசிய மக்கள் சுயாட்சி பெறுவதற்கான அடிப்படையான உரிமையை அங்கீகரித்து, மேற்படி பராதீனப்பட்ட ஜனங்களைக் குறிப்பிட்ட காரிய சாத்தியமான கால அளவுக்குள்ளே அரசியல் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் சமூகத் துறையிலும் மேற்படி சுயாட்சிக்குத் தயார் செய்வதற்கான நடவடிக்கைகளைக் கூடிய சீக்கிரத்தில் ஆரம்பிக்க வேண்டியது."

அடி சக்கை!

சக்கைப்போடு சக்கை!

ஆசிய மக்களின் அதிர்ஷ்டத்தைத்தான் என்னவென்று சொல்லுவது?

சுயாட்சியாம்!

அது அடிப்படையான உரிமையாம்!

மேற்படி சுயாட்சிக்கு ஆசிய மக்களைத் தயார் செய்வதாம்!

அதற்குக் காரிய சாத்தியமான கால அளவாம்!

கூத்துத்தான் போங்கள்!

மேற்படி சியாங்-வாலஸ் அறிக்கை இந்தியாவுக்குப் பொருந்துமா, பொருந்தாதா என்று ஒரு சந்தேகம் நம்மில் சிலருக்கு எழுந்திருக்கிறது. ஆசியா ஜனங்கள் என்றால், பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்டிருக்கும் ஜனங்களும் சேர்ந்தவர்களா அல்லது ஜப்பானியருக்கு உட்பட்டிருக்கும் ஜனங்கள் மட்டுந்தானா என்றெல்லாம் சிலர் ஆவலுடன் கேட்கிறார்கள்.

ஒன்று மட்டும் நாம் நிச்சயமாய்ச் சொல்கிறோம்.

மேற்படி அறிக்கை இந்தியாவுக்குப் பொருந்தாது.

அதில் "சுயாட்சி" (ஸெல்ப்-கவர்ன்மெண்ட்) என்று குறிப்பிட்டிருப்பதைக் கவனித்தால் நாம் பொருந்தாது என்று சொல்வதின் காரணம் விளங்கும்.

அட்லாண்டிக் சாஸனத்தில் சொல்லுவதுபோல் சுதந்திரம் என்றோ, விடுதலை என்றோ குறிப்பிடாமல் "சுயாட்சி" என்று இந்திய அதிகாரவர்க்க பாஷையில் சொல்லியிருக்கிறதல்லவா?

"சுயாட்சி" என்றால், எத்தனையோ விதச் சுயாட்சி இருக்கிறது. குடியேற்ற நாட்டுச் சுயாட்சி, மாகாண மத்திய சுயாட்சி, ஸ்தல சுயாட்சி, சமஸ்தான சுயாட்சி, பெரும்பான்மை இந்திய நிர்வாக சபைச் சுயாட்சி — எல்லாம் இருக்கிறது.

உண்மையில், இந்தியாவில் இப்போது நடந்து கொண்டிருப்பதே ஒரு விதச் சுயாட்சிதான் அல்லவா?

அதாவது இந்திய நிர்வாக சபையில் பெரும்பாலோர் இந்தியர்களாயிருப்பது சுயாட்சி அல்லவா?

ஆகவே, "இந்தியாவில் ஏற்கெனவே சுயாட்சி ஸ்தாபித்தாகி விட்டது!" என்று பிரிட்டிஷ் சர்க்கார் சொல்லி விடுவார்கள்.

"நமக்குச் சுதந்திரம் தான் வேண்டும்; சுயாட்சி வேண்டியதில்லை" என்று இந்திய மக்களும் நிச்சயமாய்ச் சொல்லி விடுவார்கள்.

ஆகவே, சுயாட்சிக்கு நம்மைத் தயார் செய்யவேண்டிய அவசியம் கொஞ்சம் கூடக் கிடையாது.

இதையெல்லாம் உத்தேசிக்கும்போது சியாங் - வாலஸ் அறிக்கை இந்தியாவுக்குப் பொருந்தவே பொருந்தாது என்று ஏற்படுகிறதல்லவா?

இப்படி ஏற்பட்டபிறகு அதைப்பற்றி ஒரு வார்த்தை எழுதுவதும் அநாவசியந்தான். இதோ நிறுத்திவிடுகிறோம்.

அதுமுதல் ஜப்பானுக்குச் சனியன் பிடித்தது என்றே சொல்லலாம். கோவணம் கட்டிக்கொண்ட சந்நியாசியின் குடும்பம் வரவரப் பெரிதானது போல், சில தீவுகள் ஜப்பானுக்குக் கிடைக்கப் போக, அதிலிருந்து ஏகாதிபத்திய வெறியே வளர்ந்து விட்டது.

அந்த வெறியின் பலனைப் பக்கத்திலுள்ள சீனு அநுபவிக்க நேர்ந்தது.

சீனுவில் ஜப்பான் பிரவேசித்துச் செய்யும் அட்டூழியங்களைப் பற்றிக் கேட்ட பின்னர், ஆசியாக்காரர்களின் ஆசையும் குன்றலாயிற்று. முக்கியமாக, இந்தியாவில் பெரும்பாலோர் ஜப்பானல் ஆசியாவுக்கு அதிர்ஷ்டம் பிறக்கும் என்ற ஆசையை இழந்தார்கள்.

ஏகாதிபத்தியம் சம்பாதித்து ஆள ஆசைப்படுகிறவர்களுக்கு மற்ற எது இருந்தாலும் போதாது; இராஜ தந்திரமும் தீர்க்க திருஷ்டியும் வேண்டும்.

இவை ஜப்பானியரிடம் இல்லையென்பதை இரண்டு வருஷத்துக்கு முன்னல் அவர்கள் அநாவசியமாக யுத்தத்தில் குதித்தபோது விளங்கி விட்டது.

அதிலும் எப்படிக் குதித்தார்கள்? 'பேர்ல் ஹார்'பரை மோசடியாகத் தாக்கி, உலகமெல்லாம் வெறுக்கும்படியான காரியத்துடன் குதித்தார்கள்.

ஜப்பான் அமெரிக்காவை அவ்விதம் தாக்கியது, பசியுடன் தூங்குகிற ராட்சதனை எழுப்பி, "இதோ நான் இருக்கிறேன்" என்று சொல்வது போலாயிற்று.

அமெரிக்கா என்பது ஒரு பெரிய கண்டம்; பண வசதியிலும், இயற்கை வசதியிலும், இயந்திர வசதியிலும் உலகத்திலேயே இணையற்றது.

'பேர்ல் ஹார்பர்' தாக்குதல் நடந்த இரண்டு வருஷத்துக்குள் அதைப்போல் பன்மடங்கு பெரிய கப்பல் படையை அமெரிக்கா தயாரித்துவிட்டது.

மற்றத் தேசங்கள் எல்லாம் ஆயிரக் கணக்கில் ஆகாச விமானங்கள் தயாரிக்க, அமெரிக்காவோ லட்சக்கணக்கில் பிரம்மாண்டமான பறக்கும் கோட்டைகளைத் தயாரித்துத் தள்ளிக் கொண்டிருக்கிறது.

எனவே, ஜப்பானியரின் தனிப்பட்ட உறுதி, வீரம், ஒன்றும் பயன்படப் போவதில்லை. எவ்வளவுதான் நீடித்துப் பிடிவாதமாகப் போர் நடத்தினுலும் முடிவில் தோல்வி அடைந்தே தீர வேண்டும்.

தோல்விதான் வந்தது என்றாலும் சாதாரணமாக மற்றத் தேசங்களுக்கு நேருவதுபோலவே வரப்போகிறது!

தோல்வியுற்ற ஜெர்மனிக்குக் காட்டப் போகிற சலுகையை ஒருநாளும் ஜப்பான் விஷயத்தில் காட்ட மாட்டார்கள்.

மறுபடியும் பல நூற்றாண்டுகள் ஜப்பான் தலையெடுக்க வொட்டாமல் செய்யத்தான் பார்ப்பார்கள்.

சியாங் — வாலஸ் அறிக்கையிலும் இதைத்தான் காண்கிறோம்.

ஜப்பான் இராணுவ பலத்தை என்றென்றைக்கும் நிர்மூலமாக்கிவிட வேண்டியது என்பது அவர்களுடைய முடிவு.

ஜப்பானியருக்கு வரப் போகும் கதியை நினைத்தால், நமக்குக் கதி கலங்குகிறது. அவர்களைக் கடவுள் தான் காப்பாற்ற வேண்டும்!

எது எப்படியானுலும், ஆசியாவின் அதிர்ஷ்டத்துக்கு ஜப்பானை நம்பிப் பயனில்லை யென்று நிச்சயமாகிவிட்டது.

இனி நம்பினல், சீனுவைத்தான் நம்பவேண்டும்.

எனவே, சியாங் - வாலஸ் சந்திப்பை மேலும் தொடர்ந்து கவனிப்போம்.

* * *

பசிபிக் சமாதானத்துக்கு ஜப்பானுடைய இராணுவ பலத்தை நிரந்தரமாக ஒழித்துவிட வேண்டுமென்று தீர்மானித்த பிறகு, "சரி, ஜப்பானுடன் இன்னும் தீவிரமாக யுத்தம் நடத்துவதற்கு உங்களுக்கு என்னென்ன வேண்டும்?" என்று வாலஸ் கேட்டார்.

சியாங்காய் ஷேக் தமக்கு இன்னின்ன யுத்தத் தளவாடங்கள், ஆயுதங்கள் முதலியவை வேண்டுமென்று தெரிவித்தார்.

வாலஸ், "ஆகட்டும், பார்க்கலாம்!" என்றார்.

"அதோடு, இன்னொரு காரியமும் செய்ய வேண்டும்" என்றார் சியாங்காய் ஷேக்.

"என்ன?" என்று கேட்டார் வாலஸ்.

"இந்த யுத்தமானது ஐரோப்பா - அமெரிக்கா சுதந்திரத்துக்காக மட்டும் நடக்கவில்லை; ஆசியாவின் சுதந்திரத்துக்காகவும் நடக்கிறது என்பதை உறுதிப்படுத்த வேண்டும்" என்றார் சியாங்காய் ஷேக்.

# ஆசியாவின் அதிர்ஷ்டம்!

பஞ்சாங்கத்திலே கல்யாண முகூர்த்தத் தேதிகள் எத்தனையோ இருக்கின்றன.

ஏதாவது ஒரு தேதியைக் குறிப்பிட வேண்டியது.

தேதி குறிப்பிட்டானதும் கல்யாணம் ஆனாற் போலத்தான்.

அப்புறம் செய்யவேண்டிய காரியங்கள் அதிகமாக ஒன்றுமில்லை.

பெண் பார்க்கவேண்டும்; மாப்பிள்ளை பார்க்க வேண்டும்; பெண்ணும் மாப்பிள்ளையும் ஒருவரை யொருவர் பார்க்க வேண்டும்; இருவருக்கும் பிடித்திருக்க வேண்டும்; இரண்டு வீட்டாருக்கும் சம்மதமா யிருக்க வேண்டும். பிறகு, கல்யாணத்துக்குப் பந்தல் போட வேண்டும்; அரிசி முதல் அப்பளம் வரையில், எண்ணெய் முதல் தொன்னை வரையில் சாமான்களைச் சேகரிக்க வேண்டும்; நாதஸ்வரத்துக்கும் சங்கீதக் கச்சேரிக்கும் அச்சாரம் கொடுக்க வேண்டும். பத்திரிகை அச்சடிக்க வேண்டும்.

ஆனால், இதெல்லாம் என்ன பிரமாதம்? கல்யாணத் தேதி குறிப்பிட்டு விட்டால் பாக்கியெல்லாம் தானே நடந்து விடுகிறது!

கல்யாணமே ஆனாற் போலத்தான். கவலையே வேண்டாம்!

* * *

மேற்சொன்ன ரீதியிலேதான் ஆசியாவுக்கு அதிர்ஷ்டம் வந்திருக்கிறது!

அதிர்ஷ்டம் எங்கே, எப்படிக் கிளம்பிற்று, என்ன ரூபத்தில் நம்மைத் தாக்குகிறது என்று கேட்டால், இதோ சொல்கிறோம்.

அமெரிக்காவின் வைஸ் - பிரஸிடெண்ட் வாலஸ் என்பவர் சைனாவுக்குப் பறந்து போனார்.

சைனாவின் பிரதான புருஷரான சியாங்-காய்-ஷேக்கைச் சந்தித்தார்.

இருவரும் கையை வலிக்கும்படி குலுக்கிய பிறகு, பல விஷயங்களைப் பற்றியும் கலந்து ஆலோசித்தார்கள்.

"ஜப்பானைத் தோற்கடிப்பது தான் முதல் காரியம், முதன்மையான காரியம், அவசரமான காரியம்" என்ற ஏகமனதான முடிவுக்கு அதிசீக்கிரமாக அவர்கள் வந்து விட்டார்கள்.

இதோடு வருங்காலத்தில் பஸிபிக் சமுத்திரத்தில் சமாதானம் நிலவ வேண்டுமானால், ஜப்பானுடைய இராணுவ பலத்தை நிரந்தரமாக என்றென்றைக்கும் அழித்துவிட வேண்டுமென்றும் ஒரு முகமாகத் தீர்மானித்தார்கள்.

* * *

மேலே போவதற்கு முன்னால் ஜப்பானுடைய துர்க்கதியை நினைத்து ஒரு துளி கண்ணீர் விடுவோமாக.

ஜப்பான் விஷயத்தில் நம்முடைய ஆசையெல்லாம் நிராசையாய்ப் போனதை நினைத்து ஒரு குரல் அழுவோமாக.

ஆம்; ஒரு காலத்தில் ஜப்பானால் தான் ஆசியாவுக்கு அதிர்ஷ்டம், கௌரவம், சுதந்திரம் எல்லாம் வரப் போகிறதென்று ஆசியாவாசிகள் ஆசையுடன் நம்பிக் கொண்டிருந்தார்கள்.

முப்பது, நாற்பது வருஷத்துக்கு முந்திய கதையைச் சொல்கிறோம்.

இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் ருஷியாவுக்கும் ஜப்பானுக்கும் ஒரு யுத்தம் நடந்தது.

எல்லாரும் நினைத்ததற்கு மாறாக ராட்சஸ ருஷியா சின்னஞ் சிறு குள்ள ஜப்பானிடம் அடி வாங்கிக்கொண்டு புறமுதுகிட் டோடியது.

இந்த அதிசயத்தைக் கண்டு உலகம் வாயைப் பிளந்துகொண்டு நின்றது.

ஆசியா வாசிகளுக் கெல்லாம் ரோமம் சிலிர்த்து ஆனந்தக் கண்ணீர் உண்டாயிற்று.

அப்போதுதான் ஜப்பானால் ஆசியாவுக்கு அதிர்ஷ்டம் வரப் போகிறதென்ற ஆசையும் நம்பிக்கையும் ஏற்பட்டது.

நாளுக்கு நாள் அந்த ஆசையும் நம்பிக்கையும் வளர்ந்து வந்தன.

ஜப்பானும் நாளுக்கு நாள் முன்னேற்றமடைந்து பலம் பெற்று வந்தது.

போன யுத்தத்தில் ஜப்பான் வெகு புத்திசாலித்தனமாக ஜயிக்கிற கட்சி எது என்று நிச்சயமாகத் தெரியும் வரையில் காத்திருந்து, தெரிந்தபின் நேசக் கட்சியில் சேர்ந்தது. அதனால் லாபம் அடைந்தது. பஸிபிக் தீவில் ஜெர்மனிக்குச் சொந்தமாயிருந்த தீவுகளையெல்லாம் ஜப்பான் பெற்றது.

-உம்மன்

அமெரிக்காவில் நடக்கும் ஒவ்வொரு விருந்திலும் பிரிட்டிஷ் பிரசாரகர்கள் இந்தியாவைப் பற்றி விஷமப் பிரசாரம் செய்து வருகிறார்கள் என்று செய்தி வருகிறது.

யுத்தத் தலைவர்
சர்ச்சில்



யுத்தத்திற்குப் பிறகு
சர்ச்சில்



"இந்த யுத்தத்தில் சர்ச்சில் நம் அரும் பெரும் தலைவராயிருக்கிறார். ஆனால், யுத்தத்திற்குப் பிந்திச் செய்யவேண்டிய காரியங்களுக்கு அவர் லாயக்கற்றவர்!" என்று ஆசிரியர் ஹெராள்டு லாஸ்கி கூறுகிறார்.

# நிகழ்ச்சிச் சித்திரம்

சர்க்கார் குற்றச்சாட்டுகள்

மகாத்மா காந்தியின்மீது
அதிகாரவர்க்கத்தார் சுமத்திய
குற்றச் சாட்டுகள் எல்லாம்
ஜெர்மனியின் 'பறக்கும்
குண்டு'களைப் போலவே
குறிதவறி விழுந்து வீணாயின.

வங்காளத்து மந்திரிசபையைப் படுதோல்வியிலிருந்து
பாதுகாப்பதற்காக வங்காள கவர்னர் கேஸி
அம்மாகாணச் சட்டசபையை ஒத்தி வைத்து விட்டார்

எதிர்க் கட்சியினர்

பிரதம
மந்திரி
நாஸிமுதீன்

வங்க கவர்னர் கேஸி.

தாளர் மகாநாடு கூடினாலும் சரி, அல்லது எப்போது எங்கே கூடினாலும் சரி, தமிழ் நாட்டு முதலாவது எழுத்தாளர் மகாநாட்டின் தலைமைப் பதவிக்கு ஸ்ரீ வ. ரா. அவர்களைத் தேர்ந்தெடுப்பதே பொருத்தமாயிருக்கும்.

### சர்க்காரின் உதவி

எழுத்தாளர் மகாநாட்டைப் பற்றி இவ்வளவு எழுதிய பிறகு, "மகாநாடு நடக்குமா?" என்ற அடிப்படையான சந்தேகம் எழுகிறது. கம்பர்-ஒட்டக்கூத்தர் காலத்திலிருந்து இல்லாத அதிசயமாக, எழுத்தாளர்கள் ஒன்று கூடி ஒற்றுமையாக ஒரு மகாநாட்டை நடத்துவதென்பது அவ்வளவு எளிதில் நடக்கக்கூடிய காரியமாகத் தோன்றவில்லை. ஆனால் எழுத்தாளர்களுக்குள் அத்தகைய ஒற்றுமை ஏற்படுவதற்கு ஒத்தாசையாக பிரிட்டிஷ் சர்க்கார் சமீபத்தில் ஒரு காரியம் செய்திருக்கிறார்கள். அதாவது எழுத்தாளித் தொழிலுக்கே உலை வைக்கும்படியான காகிதக் கட்டுப்பாட்டுச் சட்டத்தைச் சமீபத்தில் வெளியிட்டிருக்கிறார்கள்.

### எழுத்துக்கு ஆபத்து

சென்ற சில காலமாகத் தமிழ் நாட்டில் புத்தகத் தொழிலில் ஒரு புது மலர்ச்சி ஏற்பட்டிருக்கிறது. ஏராளமான புத்தகப் பிரசுரக் கம்பெனிகள் தோன்றியிருக்கின்றன. அழகான தோற்றங்களுடன் பல ரகமான புத்தகங்கள் வெளியாகி வருகின்றன. கதைப் புத்தகங்கள், கட்டுரைப் புத்தகங்கள், அறிவை வளர்க்கும் புத்தகங்கள், உணர்ச்சியைத் தூண்டும் புத்தகங்கள், காவிய ஆராய்ச்சி நூல்கள், கவிதை மணம் வீசும் நூல்கள், மாதம் மலரும் நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள், — இப்படியாக, எத்தனையோ புத்தகங்கள் விதவிதமான வர்ண உடைகளை அணிந்து கொண்டு வெளியாகி வருகின்றன. இப்போது சர்க்கார் வெளியிட்டிருக்கும் உத்தரவு என்ன சொல்கிறதென்றால், 1943ம் வருஷத்தில் வெளியான புத்தகங்களில் 100க்கு 30 வீதந்தான் இனிமேல் வெளியிடலாம் என்றுதான். இந்தியாவில் செய்த காகிதத்தை உபயோகிக்கும் மாதப் பத்திரிகைகளுக்கும் வாரப் பத்திரிகைகளுக்குங்கூட இந்தக் கட்டுப்பாடு உண்டாம். இந்தியாவில் காகித உற்பத்தி குறைந்திருப்பதை முன்னிட்டு இம்மாதிரி அழகான உத்தரவைச் சர்க்கார் விதித்திருக்கிறார்களாம்! இந்த உத்தரவை என்ன முறையில் அமுல் நடத்தப் போகிறார்கள், என்னென்ன விதிவிலக்குச் செய்யப் போகிறார்கள் என்றெல்லாம் இன்னும் விவரம் தெரியவில்லை. மொத்தத்தில் இந்தக் கட்டுப்பாடு மிகவும் மோசமானது, ஆபத்தானது, அநியாயமானது என்பதில் சந்தேகமில்லை. நாட்டில் அரிசிப் பஞ்சம், விறகுப் பஞ்சம், கிரோஸின் பஞ்சம் முதலியவை தாண்டவமாடுவது போதாது என்று, அறிவுப் பஞ்சத்தையும் உண்டாக்கி வளர்ப்பதுதான் இந்தச் சட்டம் அமுலுக்கு வருவதின் பயனாக முடியும். நாட்டின் மற்ற அநாவசியத் தேவைகளையெல்லாம் குறைத்துக் கொண்டாவது, அறிவு வளர்ச்சிக்குச் சாதனமான பொருள்களுக்குப் பஞ்சம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். புத்தகப் பிரசுரங்களுக்கு வேண்டிய காகிதத்தை உள்நாட்டிலோ வெளி நாட்டிலோ சம்பாதித்துக் கொடுப்பது சர்க்காரின் முதல் கடமையாகும்.

### தகவல் சொல்வார்களா?

எழுத்தையும், எழுத்தாளரையும் பற்றியே இவ்வளவு தூரம் எழுதிய பிறகு, கடைசியாக ஒரு தமிழ் எழுத்தாளர் வீட்டில் நடந்த சம்பவத்தைப் பற்றிக் குறிப்பிட்டு முடிக்க விரும்புகிறோம். சிதம்பரத்தில் "சூறாவளி" ஆசிரியர் ஸ்ரீ க. நா. சுப்பிரமணியம் வீடு போலீஸாரால் சோதனை போடப்பட்டதென்றும், ஆனால் அவர்கள் விரும்பியது எதுவும் கிடைக்கவில்லையென்றும் அறிகிறோம். போலீஸார் விரும்பியது கிடைக்காவிட்டாலும், நாம் விரும்புகிற தகவலாவது போலீஸாருக்குத் தெரிந்திருந்தால் நமக்குத் தெரியப்படுத்தக் கோருகிறோம். "கல்கி" சிறுகதைப் போட்டிக்கு வந்த சுமார் 1300 கதைகளில் எவ்வளவு கதைகளை ஸ்ரீ க. நா. சு. பரிசீலனை செய்திருக்கிறார் என்ற தகவல்தான் நாம் அறிய விரும்புவது. மேற்படி போட்டிக் கதைகளைப் பூர்வாங்க பரிசீலனை செய்யும் பொறுப்பு ஸ்ரீ க. நா. சுப்பிரமணியத்திடம் மற்ற நீதிபதிகளினால் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. பூர்வாங்க பரிசீலனை முடிந்த பின் எல்லாப் பஞ்சாயத்தாரும் கூடி முடிவான பரிசீலனை செய்து தீர்ப்புச் சொல்ல வேண்டும். எனவே, ஆகஸ்டு மாதக் கடைசிக்கு முன்னால் முடிவு வெளியாவது சாத்தியமில்லை என்பதைச் சிறுகதைப் போட்டியில் கலந்து கொண்ட நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

**ஐந்து ரூபாய் பரிசு :** *சென்ற இதழில் வெளியான "சரியான பதில்!" என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர் : அம்பா, பெரம்பூர் பாரக்ஸ், மதராஸ்.*



# கல்கி

மலர் 3 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் { இதழ் 38

# என்ன சேதி?

## எழுத்தாளர் மகாநாடு

கோயமுத்தூர் இளம் தமிழ் எழுத்தாளர் சிலர் ஒரு பேராசை முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். தங்கள் நகரில் அவர்கள் ஜில்லா எழுத்தாளர் சங்கம் ஒன்றை ஸ்தாபித்துக் கொண்டார்கள்; அத்துடன் திருப்தியடையவில்லை. மாகாண எழுத்தாளர் மகாநாட்டைக் கோயமுத்தூரிலே கூட்டிவிட வேண்டுமென்று அவர்கள் ஆசைப்படுகிறார்கள். ஆசைப்படுவதோடு சும்மா இருந்துவிடாமல், அதற்கு வேண்டிய முயற்சிகளையும் நடத்தி வருகிறார்கள். சென்னை மாநகரைத் தேடி வந்து இங்குள்ள எழுத்தாளர்களுக்கெல்லாம் ஒரு விருந்து நடத்தி, கோயமுத்தூரில் எழுத்தாளர் மகாநாடு கூட்டுவதைப் பற்றி யோசித்தார்கள். அன்று விருந்துக்கு வந்திருந்த எழுத்தாளர்கள், "மகாநாட்டின் ஆரம்ப முயற்சியே இவ்வளவு ருசிகரமாயிருக்கிறதே? இன்னும் மகாநாடு உண்மையில் நடைபெறும் போது எவ்வளவு பரமானந்தமாயிருக்குமோ?" என்று பிரமித்திருப்பார்கள்.

## அக்ராசனர் யார்?

எழுத்தாளர் மகாநாடு கூட்டினால் அதற்கு அக்ராசனர் யாரைப் போடுவது என்பதுபற்றி யோசனை நடந்ததாகவும் யோசனை முடிவு பெறவில்லையென்றும் அறிகிறோம். நம்மைப் பொறுத்த வரையில் இதைப்பற்றிச் சந்தேகமே கிடையாது; சந்தேகம் ஏற்படவும் நியாயம் இல்லை. முதலாவது தமிழ் நாட்டு எழுத்தாளர் மகாநாட்டுக்குத் தமிழகத்தின் முதலாவது எழுத்தாளரைத்தான் அக்ராசனராகப் போட வேண்டும். அப்படித் தமிழ் நாட்டின் முதல் எழுத்தாளர் யார் என்பதைப் பற்றியும் சந்தேகம் ஏற்பட நியாயமில்லை. [illegible] என்று எழுத்தாளர் உலகில் வழங்கும் ஸ்ரீ வ. ராமசுவாமி அய்யங்கார் அவர்களைத் தவிர வேறு யாருக்கும் அந்த உரிமை கிடையாது. தற்காலத்தில் தமிழ் நாட்டில் எழுத்துத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்குள்ளே முதலாவது எழுத்தாளி அவர்தான். கால் நூற்றாண்டுக்கு முன்னால் முதன் முதலில் தமிழில் நவீனமுறையில் கதைகளும், கட்டுரைகளும் எழுதத் தொடங்கியவர் அவர்தான். தமிழ் நாட்டில் இப்போது எழுத்துத் தொழிலில் ஈடுபட்டவர்களில் பெரும்பாலோர் வ. ரா. வினால் எழுத்துத் துறைக்கு இழுக்கப்பட்டவர்களோ, அல்லது அத் துறையில் அவரால் ஊக்கித் தள்ளப் பட்டவர்களோ ஆவார்கள்.

## பிறவி எழுத்தாளர்

ஏதோ ஒழிந்த வேளையில் பொழுது போக்காகச் சில பிரமுகர்கள் அந்த நாளில் தமிழ் எழுத ஆரம்பித்தார்கள். வ. ரா. அம்மாதிரி எழுத ஆரம்பித்தவரல்ல; அல்லது பிழைப்புக்காக எழுத்துத் தொழிலை மேற்கொண்டவரும் அல்ல. அவர் பிறவி எழுத்தாளர். அதாவது பிறக்கும் போதே தலையில் எழுத்துத் தொழிலாளி என்று எழுதப்பட்டுப் பிறந்தவர். "மாதம் ஆயிரம் ரூபாய் தருகிறேன்; நீர் ஒன்றும் எழுதாமல் இரும்" என்று யாராவது சொன்னால் எத்தனையோ எழுத்தாளர்கள் ஆனந்தக் கடலில் ஆழ்ந்துவிடுவார்கள். வ. ரா. விடம் அது பலிக்காது. "உன் ரூபாயைக் கொண்டு உடைப்பிலே போடு; என்னால் எழுதாமலிருக்க முடியாது!" என்றுதான் அவர் சொல்வார். பல விஷயங்களில் வ. ரா. வின் இப்போதைய அபிப்பிராயங்களிலிருந்து காத தூரம் மாறுபட்டு நிற்பவர்கள்கூட மேற்கூறியதையெல்லாம் ஒப்புக்கொண்டே தீர வேண்டும். எனவே, கோயமுத்தூரில் முதல் எழுத்

## லியோ பிலீம்ஸாரின் உன்னத தயாரிப்பு!



K. R. ராமசாமி — U. R. ஜீவரத்னம்

K. சாரங்கபாணி — K. R. செல்லம்

T. R. ராமச்சந்திரன்

N. S. கிருஷ்ணன், T. A. மதுரம்

நடிக்கும்

# பூம்பாவை



வசனம் :
A. A. சோமயாஜுலு

பாட்டு :
மாரியப்ப சுவாமிகள்

சங்கீத டைரக்ஷன் :
அந்தேபல்லி ராமராவ்

டைரக்ஷன் :
T. பாலாஜி சிங்



ஸ்டூடியோ :
நியூடோன்



டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

## கந்தன் & கம்பெனி

கோயமுத்தூர் — மதுரை — கோட்டயம்

# கல்கி

மலர் 3 இதழ் 38 | 1944 ஜூலை 2 | தாரண ௵ ஆனி 19

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

வீர இராஜபுத்திர நாட்டில் உயர் குலத்தில் உதித்த குழந்தை மீராவைப் பூர்வ ஜன்மத்தில் விட்ட குறை வந்து தொட்டு விடுகிறது. கண்ணன் பிறந்த நிலத்தில் பிருந்தாவனத்திலிருந்து ஸ்ரீ ரூபகோஸ்வாமி என்னும் மகான் மீராவின் வீட்டுக்கு வருகிறார். அவர் கொண்டு வந்த கிரிதரகோபாலனின் விக்கிரகத்தில் உண்மைக் கண்ணனையே மீரா காண்கிறாள். அவனுடைய இன்பப் புன்னகைக்குத் தன்னையே இரையாகக் கொடுக்கிறாள். குழந்தை உள்ளத்தில் அன்று எழுந்த பிரேமைக் கனல் நாளுக்கு நாள் கொழுந்து விட்டு வளர்கிறது. மாயக் கண்ணனுக்கே மணமாலை சூடுவேனென்று மனதில் மீரா உறுதிகொள்கிறாள். வெள்ளித் திரையில் சகுந்தலை பெற்ற பிள்ளையாக முன்னம் நடித்து, செல்லக்குட்டியைத் தட்டி விளையாடி, தமிழ் மக்களின் அன்பைக் கவர்ந்த குழந்தை ராதா இப்போது சந்திரபிரபா ஸினிடோன் தயாரித்துவரும் மீரா படத்தில் பால மீராவாக நடிக்கும் செய்தி தமிழர்களுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளிக்குமென்று நம்புகிறோம். திரையில் பால மீராவின் பக்தி பரவச நடிப்பு எவ்வளவு அற்புதமா யிருக்கப்போகிற தென்பதை, நமது அட்டைப் படத்தில் வெளியாகி யிருக்கும் குழந்தை ராதாவின் உணர்ச்சி ததும்பும் முகத் தோற்றத்திலிருந்து ஒருவாறு ஊகிக்கலாம்.

★



★

# நீங்கள் சாப்பிடும் ஒவ்வொரு பதார்த்தமும் ஊக்கம் அளிக்கின்றனவா?




ஒவ்வொரு ஸ்திரீயும் எந்தெந்த பதார்த்தங்கள் ஊக்கமளிக்கக் கூடியவை என்பதை அறிந்திருக்க வேண்டும். டால்டா "குக்-புக்" (ஆங்கிலத்தில் மட்டும்) உணவுப்பொருள்களின் தராதரத்தைப் பற்றியும், 150 இந்திய ஆகாரத் திட்டங்களைப் பற்றியும் விவரித்திருக்கிறது. Dept. D133 P.O. Box No. 353 Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்பு அனுப்புங்கள்



ஆம்; அளிக்கின்றன. உணவு ஊக்கமளிக்கிறது! ஆனால் எல்லா உணவும் வேண்டிய அளவிற்கு ஊக்கமளிப்பதில்லை. சில அதிகமும், சில குறைவாகவும் அளிக்கின்றன. இங்குதான் ஆரோக்கியத்திற்கு அபாயமிருக்கிறது. நமக்குப் பிரியமான சில உணவுகளில் ஊக்கமளிக்கக்கூடிய சக்தி குறைவாக இருப்பதால் இவ்வுணவுகளிலிருந்து ஊக்கத்தை எதிர்பார்க்கும் ஜனங்கள் விளையாட்டிலோ, வேலையிலோ வெகு சீக்கிரம் களைப்படைகிறார்கள். எல்லா உணவுகளையும் அதிக சக்தி கொடுக்கக் கூடியவைகளாக செய்யலாம்—வைடமின் நிறைந்த டால்டாவினால் சமையல் செய்வதால் இயற்கை தரக்கூடிய சக்திப் பொருள்களையும் அநேக உணவுகளிலில்லாத சத்துக்களையும் டால்டா தருகிறது. நீங்கள் சாப்பிடும் உணவுகளுக்கு அதிக ஊக்கத்தையும் கொடுக்கிறது.

வைடமின் நிறைந்த **டால்டா** ஊக்கமளிக்கிறது.

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.





★



வைரம்
பொன்
வெள்ளி
நகைகளுக்கு


★

# விஷயமறிந்த மனிதனின் கொள்கை-



தொழிற்சாலைக்கு வேண்டியவைகளை வாங்கும் விஷயமறிந்த டைரக்டர், இயந்திரங்கள் எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியமானவர். தோல், உலோகம் அல்லது மர தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் சகலவித பொருள்களுக்கும் அஜாக்ஸ் உயர் தர பட்டசிலைகள் உபயோகப்படுத்தப் பட்டதாய் இருந்தால் வெகு சேர்த்தியாய் இருக்கும்.

- பிளின்ட் (ஸாண்ட்)
- கார்னெட்
- எமரி
- அஜாக்ஸைட்

பேப்பர்

- க்ளாத்
- டிஸ்க்ஸ்
- ரோல்ஸ்
- பெல்ட்ஸ்
- டேப்ஸ்

மற்றுமுள்ளவைகள்.

# அஜாக்ஸ்

## பிராடக்ட்ஸ் லிமிடெட்,

106, அரமனைக்காரத் தெரு,
சென்னை.

---

மானேஜிங் ஏஜண்டுகள் : முருகப்பா & சன்ஸ்

தென் இந்தியாவுக்கு விற்பனை ஏஜண்டுகள் :

**மார்ஷல் ஸன்ஸ் & கோ., (இந்தியா) லிமிடெட்,**

தபால் பெட்டி 141 : : : : சென்னை.

A. S. K. 10.

எல்லோராலும் எவ்வகையிலும்
மேன்மையானதெனப் போற்றப்படும்

# தமிழ் ஹரிச்சந்திரா

ப்ரகதி
தயாரிப்பு



இப்பொழுது தமிழ் நாட்டிலும்
ஆந்திர தேசத்திலும் பெங்களூரிலும்
வெற்றிகரமாக நடைபெறுகிறது



டிஸ்டிரிபியூடர்கள் :

## FAMOUS TALKIE DISTRIBUTORS

**MADRAS — MADURA — BANGALORE — BEZWADA — HUBLI**